# டாக்டர் "நஜன்" எழுதிய
# பிரதிபாவின் ஆன்மீக புத்தகங்கள்

அன்னை பராசக்தி

குருதத்துவம்

கருணை காமாக்ஷி

லக்ஷ்மி கடாக்ஷம்

சுவாமியே சரணம் ஐயப்பா

பாவை உணர்த்தும் தத்துவங்கள்

ஸ்ரீ சக்ர நாயகிகள்

ஸ்ரீ வேங்கடேஸ்வரர் ஸ்துதி மாலா

ஸ்ரீ நவதுர்க்கா

ஸ்ரீ வித்யா பாராயணக் கிரமம்

ஸ்ரீ தத்தாத்ரேய விஜயம்

ஹரி ஹர அம்ச ஆசார்யர்கள்

ஸ்ரீ சண்டி ஹோமவிதானம்

ஆத்ம குஹா சிதானந்தமயம்

சக்தி பிரபாவம்

சர்வ மங்களா

ஸ்ரீ வித்யா நவாவரண பூஜை

ஸ்ரீ ஷடன்வய சாம்பவாக்யா பூஜா

குண்டலினி சக்தி

சரபேஸ்வர சர்வஸ்வம் பிரத்யங்கரா பிரபாவம்

ஸ்ரீ வித்யா (லகு பூஜை)

தேவி மானஸ பூஜை

காளிமாதா ஹ்ருதயம்

ஜபமாலா

சுதர்ஸன ஸர்வஸ்வம்

ஆலயங்களும் ஆகமங்களும்

கன்னிகா பரமேஸ்வரி

நந்திக் கதம்பம்

ஸ்ரீ பஞ்சகம்

சீதாஹோமவிதானம்

அம்பிகையின் அழகு அலை (ஸௌந்தர்யலஹரி)

உபநிஷத் ஆலமரம்

பிரும்ம ஸூத்திரம்

ஆன்மவிசார ஸாகரம்

மகரிஷிகள் காட்டிய ஞானநெறி

ஜோதியில் கலப்போம்

(ஸ்ரீ பாஸ்கரராயரின்)

# வரிவஸ்யா ரகசியம்

(ஸ்ரீ வித்யா உபாசகர்களுக்கான அரிய பொக்கிஷம்)

ஆசிரியர்:
ஸ்ரீ வித்யா ஞான பாஸ்கரா
டாக்டர் "நஜன்"
(எஸ். நடராஜன்)



பிரதிபா பிரசுரம்
தோற்றம் : : நவ:ராத்திரி 1973

பிரசுரித்தவர்:
என். லலிதாம்பாள்
"லலிதாலயா"

பிரதிபா பிர்சுரம்
95/1, ஆடம் தெரு, மைலாப்பூர்,
சென்னை-600 004. போன் 24640720.

(விலை ரூ. 40.00



வரிவஸ்யா ரகசியம்

(Varivasya Rahasyam)

முதற் பதிப்பு : மே 1983,

இரண்டாம் பதிப்பு : அக்டோபர் 2004

பிரதிபா பிரசுரம்

78

விலை ரூ. 40-00

---

## பொருளடக்கம்



---

**Typeset by MADURAM LASER PRINT - Chennai - 4.**

**Printed by MURUGAN OFFSET PRINTERS - Chennai - 4.**

ஸ்ரீ சந்தரமௌளீச்வராய நம:

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்ய பரம்பரை

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி**

**ஜகத்குரு ஸ்ரீசங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

**ஸ்ரீமட ஸமஸ்தானம் காஞ்சீபுரம் - 502**

யாத்ராஸ்தானம் : கர்னூல் — தேதி : 04.09.1983

# ஸ்ரீ முகம்

அனேக தெய்வீக நூல்களை எழுதி ப்ரஸித்தியடைந்துள்ள ஸ்ரீ நடராஜன் (நஜன்) இப்போது வெளியிட்டிருக்கும் "வரிவஸ்யா ரகசியம்" என்னும் நூல் சிறந்த ஸ்ரீ வித்யா உபாஸகராக விளங்கிய ஸ்ரீ பாஸ்கரராயரின் வரிவஸ்யா ரஹஸ்யத்தின் விளக்கமாய் அமைந்திருக்கிறது.

இந்நூலில் ஸ்ரீ வித்யா பஞ்சதசாக்ஷரீ, ஸ்ரீ சக்ரம் இவைகளின் விசேஷங்கள் விமர்சாத்மக சக்தி ஸ்வரூபம், காயத்ரியும், ஸ்ரீ வித்யையும், மந்த்ராக்ஷரங்களின் ஸ்வரூபங்கள், ஸ்தானங்கள் பிந்துஸ்வரூபம், ஐந்து அவஸ்தைகள் முதலிய விவரங்களுடனும் மூலக்ரந்தத்தை அனுஸரித்து வேதம் முதலிய ப்ரமாணங்களுடனும் எளிய தமிழ் நடையில் நன்கு நிருபிக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ வித்யா உபாஸகர்கள் இந்நூலின் மூலம் தத்வங்களை அறிந்துகொண்டு தேவியை நன்கு உபாஸித்துக்கொண்டு நற்பயன்களை அடைவார்களாக.

**நாராயண ஸ்ம்ருதி**

---

## குரு தத்துவம்

உபதேச மஞ்சரியுடன் கூடியது

பிரதிபாவின் 2-வது புத்தகமாக வெளிவந்துள்ளது

# பதிப்பாசிரியர் நன்றி

இதுவரை வெளியான ஸ்ரீ வித்யை பற்றிய பிரதிபா பிரசுர நூல்களை படித்தவர்களுக்கு வரிவஸ்யா ரகசியம் பற்றி அவசியம் தெரிந்திருக்க வேண்டும். நஜன் அவர்கள் மிகவும் எளிதில் புரியும் படியான விளக்கங்களை தந்து இதை எழுதியிருக்கிறார்கள். இது பிரதிபாவின் 78-வது புத்தகம்.

இதற்கு முகவுரை அளித்திருப்பவர் புவனேஸ்வரி அன்னையை இடைவிடாது வழிபடும் சத்குருநாதர் ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள். அவர் வாக்கு தேவியின் வாக்கு. ஆகவே இந்நூலுக்கு தேவியே முகவுரை எழுதியிருக்கிறாள் என்றே சொல்லலாம். அவருக்கு எங்கள் நமஸ்காரம்.

காமகோடி குரு மகாசந்நிதானம் மிக அருமையான அருளாசி வழங்கி இருக்கிறார். அவருக்கு எங்கள் நமஸ்காரம். மகான் பரமஹம்ஸ காயத்ரி ஆனந்த ஸ்வாமிகளிடம் சிஷ்யராக இருக்கும் பாக்கியம் பெற்று பம்பாயில் ஸ்ரீ வித்யையை பரப்பி வரும் ஸ்ரீ கே. ராம அய்யர் தம்பதிகளுக்கு இந்நூலை சமர்ப்பித்திருக்கிறோம் அவர்களுக்கு எங்கள் நமஸ்காரம்.

அட்டைப் படத்தை அழகுடன் அமைத்துகொடுத்த ஸ்ரீ சுபா அவர்களுக்கு எங்கள் நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம். மற்றும் புத்தகத்திற்கு அச்சடித்து கொடுத்த மதுரம் பிரிண்டஸ் அவர்களுக்கு ஸ்ரீ முருகன் ஆப்செட் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

மயிலாப்பூர் **என். லலிதாம்பாள்**
06-09-1983 **(பிரதிபாம்பா)**

---

## ஸ்ரீ சக்ர ராஜிதே

பாகி பாகி சுரேந்திர வந்திதே
பாகி ஸ்ரீசக்ர ராஜிதே
பாகி பங்கஜ பவசு பூஜிதே
பாகி சக்தி க்மன்விதே - பாகி

சண்ட முண்ட சம்காரிணி
ஜகதண்ட கோடி விகாரிணி
சண்டமதுர வதகாரிணி
பசு பாச சங்க விதாரிணி - பாகி

மாலினி சும மாலினி
பகமாலினி பரிபாலினி
சூலினி சுகலாயினி சுகபாஷிணி
ஸுகபோஷிணி - பாகி

## ஸ்ரீமத் சத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்களுடைய

# முகவுரை

### ஸ்கந்தாஸ்ரமம், சேலம்

நமது நாட்டு மக்களுக்கு இது சமயம் முக்கியமாக் வேண்டியது பராசக்தியின் திருவருள் ஒன்றேதான் என்பதை நன்குணர்ந்துள்ள ஸ்ரீ வித்யா ஞானபாஸ்கரா எனப் போற்ற பட்டு வருகிற நஜன் உலகமே போற்றும் தேவி உபாஸகரான ஜீவன் முக்தரெனப்படும் மஹாபுருஷரால் ஸ்ரீ வித்யோபாஸ்கர்களுக்காகவே அனுக்கிரகம் செய்யப்பட்டுள்ள வரிவஸ்யா ரகசியமென்கிற மகத்தான க்ரந்தத்தை உலகில் உள்ள தமிழறிந்த நன்மக்களுக்கு தமிழாக்கம் செய்து பஞ்சதசி மஹா மந்திரம் பற்றிய விளக்கங்களையும் ஸ்ரீ சக்கரத்தின் தத்துவங்களையும் பற்றி அழகாக இந்த நூலின் மூலமாகக் கொடுப்பதானது ஸ்ரீ வித்யோபாஸ்கர் களுக்கெல்லாம் தேவியின் மஹாப் பிரஸாதம் போன்றதேயாகும்.

நமது பாரத நாடு முழுவதிலும் உள்ள ஸ்ரீ வித்யோபாஸ்கர்கள் அனைவருக்குமே மஹா புருஷரான பாஸ்கர ராயரை தெரியாமல் இருந்து வர முடியாது. நமது நாட்டில் ஆதி சங்கர பகவத் பாதாள் ராமானுஜர், மத்வாச்சாரியார், அப்பைய தீக்ஷிதர்களைப் போலவே சாக்த மதத்திற்கே ஆசார்யராக அவதரித்தவர் மஹா புருஷரான பாஸ்கரராயரவர்களே யாகும்.

15 அக்ஷரங்களைக் கொண்ட ஸ்ரீ தேவியின் பஞ்சதசாக்ஷரி மஹா மந்திரத்தையே ஸ்ரீ வித்யை என்று சொல்லப்படுகிறது. கஷ்டங்கள் அனைத்தையும் அறவே துடைத்துக் காத்து ரக்ஷிக்கும் பெருமை ஸ்ரீ வித்யைக்குத்தான் உண்டு. ஸ்ரீ வித்யையும், பிரும்ம வித்யையும் ஒன்றேயாகும். இன்னதென்று குறிப்பிடமுடியாத பரம் பொருள் தான் தேவியின் நிஜ ஸ்வரூபமாகும்.

அனுபூதி வடிவிலான தேவியை அறிவின் பூரணப் பேரொளியான ஸ்வயம் பிரகாசமயமான ஆத்மாவாகவே உணரவேண்டியவளே ஸ்ரீ வித்யையின் அதி தேவதையான பராசக்தியாவாள் என்பதை உணர்த்தி வைக்கப்படும் வித்யைதான் ஸ்ரீ வித்யை ஆகும். உலகில் உள்ள உயிர்களுக்கும் உயிராக இருப்பவளான பரா சக்தியை (ஆத்ம சக்தியை)த் தான் மக்கள் தாயான தெய்வமென்று போற்றுகிறார்கள்.

அந்த ஸ்ரீ மாதாவான பராசக்தியானவள் ஸ்ரீ சக்கரத்தையே மும்மூர்த்திகளும் போற்றும் தமது இருப்பிடமாகக் கொண்டவளாகும்

என்பதை எல்லோருக்கும் தெரிவிக்கவே நஜன் எனப்படும் உத்தமன் இந்த நூலில் ஸ்ரீ சக்கரத்தின் தத்துவங்களையும் விரிவாக விளக்கியுள்ளார். சிறப்பு மிக்க மகா மந்திரமெனப்படும் ஆயிரம் திருநாமங்களை கொண்டவளே ஸ்ரீ மாதாவெனப்படுகிறவளாவாள். அந்த அன்னையின் மகா மந்திரமே பஞ்ச தசாக்ஷரியாகும். இந்த நூலான வரிவஸ்யா ரகசியத்தில் பஞ்சதசி மஹா மந்திரத்தின் பெருமை பற்றி, ஸ்ரீ சக்கரத்தின் தத்துவங்களைப் பற்றி விபரங்களை எல்லாம் நல்லறிவு மிக்க நஜன் உலகில் தமிழறிந்த மேன்மக்களுக்குக் கொடுக்கிறதானது மிகப்புனிதமான தானமேயாகும்.

பெருமதிப்பிற்குரிய நஜன் தமிழகத்திற்கு மேலும் இப்படிப்பட்ட நற்பணிகளை அயராது கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். இந்த 78-வது புத்தகமான வரிவஸ்யா ரகசியமானது நாட்டில் ரகசியமாகவே இருந்து வந்ததை ஸ்ரீ வித்யா ஞான பாஸ்கரனான நஜன் பிரகாசப் படுத்தி உலகில் உள்ள தமிழறிந்த மக்களுக்குக் கொடுப்பதானது மிகப் பெரிய புண்ணிய கைங்கர்யமாகுமென்று தான் சொல்லவேண்டும்.

ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமம், சேலம் - 14
27-08-1983

ஸ்வாமி
**சாந்தானந்தா**

---

## நாம மதுரஹோ !

அஹோ மதுரஹோ!
மதுர மதுரஹோ!
நாம மதுரஹோ!
காமாக்ஷிதி மீனாக்ஷிதி நாம மதுரஹோ
ஏகாக்ஷிரி திரயக்ஷிரி மந்திர மதுரஹோ
பஞ்சாக்ஷிரி சோடாசக்ஷரி மந்திர மதுரஹோ
காமேஸ்வரி கல்யாணீதி நாம மதுரஹோ
காத்தியாயினி காலகண்டி நாம மதுரஹோ
பாலா பகுளா திரிபுர சுந்தரி நாம மதுரஹோ
சாமுண்டா சர்வமங்களா நாம மதுரஹோ
விசுவேசுவரி விசாலாக்ஷி நாம மதுரஹோ
மாயாதேவி மாதங்கி நாம மதுரஹோ
சிவசங்கரி புவனேஸ்வரி நாம மதுரஹோ
மந்திரிணி தண்டிணி நாம மதுரஹோ
அன்னபூர்ணா அசுவருடா நாம மதுரஹோ
ஸ்ரீ வித்யா பிந்து தர்ப்பண பூஜா மதுரஹோ
- மதுர மதுரஹோ நாம மதுரஹோ

# சமர்ப்பணம்



ஸதகுரு ஸ்ரீ பரம ஹம்ஸ காயதரி ஆனந்தநாதர் அவர்களின் சிஷ்யரும் பம்பாயில் ஸ்ரீ வித்யையை பரப்பிவருபவருமான

**ஸ்ரீ ஹம்ஸ சரணானந்த நாதர் (K. ராம அய்யர்)**

அவர்களுக்கும் அவர் துணைவியாருக்கும் இந்த அற்புதமான

**வரிவஸ்யா ரகசியம்**

என்ற நூலை சமர்ப்பிக்கின்றோம்.

**பிரதிபா பிரசுரத்தினர்.**

---

## உரையாசிரியர் முகவுரை

ஸ்ரீ வித்யை உபாசகராக இருப்பதற்கு பூர்வ ஜன்ம புண்ணியம் வேண்டும். தக்க ஆசாரியர் கிடைக்க வேண்டும். தத்துவார்த்தங்களை விளக்குபவராக அவர் இருக்கவேண்டும். குருவருளாலும், திருவருளாலும், எனக்கு கிடைத்த இப்பாக்கியத்தால் இந்நூலை எழுத முன் வந்தேன்.

அர்த்தம் தெரியாமல் மந்திரம் சொல்வது, ஜபம் செய்வது, பூஜை செய்வது, சாம்பலின் மீது நெய் ஆகுதி செய்வது போலாகும் என்று பாஸ்கரராயரே கூறியிருக்கிறார். ஆகவே ரகசியம் என்று கருதப்பட்டு அதே ரகசியம் என்ற பெயரைக் கொண்டிருந்த போதும் ஸ்ரீ வித்யா உபாசகர்களின் தேவையை முன்னிட்டு இந்த் நூல் வெளியிடப்படுகிறது.

ஸ்ரீ சக்ர ரகசியம் என்ன என்பதை அறிந்தால்தான், ஆவரண பூஜையின் தத்துவார்த்தம் தெரியும், இப்பூஜை பற்றி எல்லாருக்கும் தெரியுமே என்று அவைகளை விளக்காமல் இருந்து விட்டேன் என்று சொல்லி மேலெழுந்த வாரியாக விளக்கிக் கொண்டு போய்விட்டார். ஆனால் அதையம் கூடுமானவரை விளக்க முயற்சித்திருக்கிறேன். த்ரை லோக்ய மோஹன கவசம் என்ற அற்புதமான ஸ்லோகங்கள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.

மயிலாப்பூர்
15-09-1983

"நஜன்"
(எஸ். நடராஜன்)

---

## ஸ்ரீ பாஸ்கரராயர்



இந்த வரிவஸ்யா ரகசியத்தைத் தந்துள்ள ஸ்ரீ ஸ்ரீ பாஸ்கர ராயரவர்கள் மஹாராஷ்டிர தேசத்தில் பிறந்தவர். தேவி சம்பந்தமான சிறந்த நூல்களையெல்லாம் இயற்றியவர்களில் மிகப் பெருமை பெற்றவராவர். மஹா புருஷரான பாஸ்கரராயரவர்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் இருக்கம் திருவிடைமருதூரில் கடைசி நாட்களை கழித்தவராவர். தேவீ உபாஸகரான மஹா புருஷரெனப்படும் பாஸ்கரராயருடைய பெருமை சொல்லுக்கடங்காததாகும், மிகப் புனிதமானதும், மஹா மஹிமைகள் நிறைந்ததும் ஸ்தோத்திரங்களில் சிறந்ததுமான ஸ்ரீ லலிதா சஹஸ்ர நாமத்திற்கு பாஷ்யத்தை இயற்றிய பெருமை மஹாபுருஷரான பாஸ்கர ராயருடையதாகும்.



# வரிவஸ்யா ரஹஸ்யம் 1

## அவளை அறியா அமரரும் இல்லை

அவளை அறியா அமரருமில்லை
அவளன்றி செய்யும் அருந்தவமில்லை
அவளன்றி ஐவரால் ஆவதொன்றில்லை
அவளன்றி யூர் புகு மாறறியேனே
அறிவார் பராசக்தி ஆனந்தம் என்பர்
அறிவார் அருவுரு வாமவ ளென்பர்
அறிவார் கரும மவளிச்சை என்பர்
அறிவார் பரனும் அவளிடம் தானே - திருமூலர்.

## ஸ்ரீவித்யை

(மந்த்ர ராஜம்)

வரிவஸ்யா ரஹஸ்யம் என்பது ஸ்ரீ பாஸ்கரராயரால் உபாஸகர்களின் உதவிக்காக ஸ்ரீ வித்யையை விளக்கும் எண்ணத்துடன் எழுதப்பட்ட நூலாகும். இந் நூலில் புகு முன் ஸ்ரீ வித்யையைப் பற்றி ஏற்கெனவே தெரிந்திருந்தவர்கள் கூட அம்பிகையின் பஞ்சதசீ மந்திரம், அவளுடைய ஸ்ரீ சக்ரம், இவைகளுக்கான நிருபணங்கள் முதலியவைகளை தெரிந்து கொண்டால் தான் இந் நூலை புரிந்துக் கொள்ள முடியும். அதற்காக ஸ்ரீ வித்யையைப் பற்றிய விளக்கம் முன்னதாகவும், தத்துவார்த்தங்களின் விளக்கம் நூலின் இறுதியிலும் சேர்க்கப்பட்டுள்ளன.

மனம் செம்மையாக செயல்பட பார்வையால் ரூபம். கேட்பதால் சப்தம் மிக அவசியம். மனம் தெய்வத்தினிடம் ஈடுபட உருவமும், யந்திரங்களும், சப்த ரீதியில் மந்திரங்களும், மிகவும் உபயோகமாகின்றன. தேவதைகள் அக்ஷர ரூபமாக இருக்கின்றனர். அக்ஷரங்கள் சப்த ரூபதில் உள்ளன. இம்மந்திரங்கள் மிக சக்தி வாய்ந்தவை.

---

மந்திர ராஜம் என்ற பெயர் ஸ்திரீ தெய்வங்களில் ஸ்ரீ வித்யைக்கும் புருஷ தெய்வங்களின் நரசிம்ம மந்திரத்துக்குமே உண்டு. சுதர்சன மந்திரம் சக்ர ராஜம் எனப்படும்.

வேதங்களில் எல்லா மந்திரங்களும் அந்த அந்த அக்ஷரங்களாகவே குறிப்பிடப் பட்டிருக்கின்றன. (உதாரணம் கணபதி - கம், துர்க்கா - தும்) ஆனால் ஸ்ரீ வித்யையைப் பற்றி வெளிப்படையாகச் சொல்லாமல் பூடகமாக பரிபாஷையில் கூறப்பட்டுள்ளது. ஆகவே இந்த மந்திரங்களை உபதேசக் கிரமத்தில் தான் பெற வேண்டும்.

இந்த ஸ்ரீ வித்யா மந்திரத்தை, சிவன், விஷ்ணு, பிரும்மா, முருகன், நந்தி, மனு, சந்திரன், குபேரன், லோபாமுத்திரை, அகஸ்தியர், அக்னி, சூரியன், துர்வாசர் ஆகிய 12 பேர்களும் 12 விதமாக உபாசித்து, சித்திகளைப் பெற்றிருக்கின்றனர். அதாவது 15 எழுத்துக்கள் கொண்ட ஸ்ரீ வித்யையை வெவ்வேறு முறையில் மாற்றியும், சிற் சில பீஜாக்ஷரங்களை வெவ்வேறு முறையில் சேர்த்தும், பல விதமாக உபாசித்துள்ளனர்.

குருவை ஸாக்ஷாத் அம்பிகையாகவே பாவிக்க வேண்டும் ஸ்ரீ வித்யை, ஸ்ரீ சக்ரம், ஸ்ரீ தேவி, அந்தராத்மா, ஸ்ரீ குரு இந்த ஐந்தையும் ஒன்றாகக் கருத வேண்டும்.

ஸ்ரீ வித்யா மந்திரத்திற்கு அதிரகஸ்ய காயத்ரீ என்ற பெயருண்டு. ஸ்ரீ வித்யா மந்திரத்தை ஒரு முறை உச்சரிப்பது, பிரும்ம காயத்ரியை மூன்று முறை உச்சரிப்பதற்குச் சமம்.

பஞ்சாக்ஷரம், ஷடாக்ஷரமம், அஷ்டாக்ஷரம் இம் மூன்றும் ஸ்ரீ வித்யையிலேயே அடங்கி இருப்பதால், எல்லா மந்திர உபாஸனையின் பலனையும் ஸ்ரீ வித்யை மூலமே பெறலாம்.

ஸ்ரீ வித்யா மந்திரம் நிஷ்காமமாக ஜபிக்கின்றவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கும்.

ஹ்ரீம் - சிவசக்தி ஐக்கிய ரூப லலிதாம்பிகையின் பீஜாக்ஷரம், சகல பிரபஞ்சத்திற்கும் காரண ரூப மந்திரம். ஹ்ரீம் என்பதே யோனி பீஜம் அல்லது மாயா பீஜம். ஓம் நிர்க்குண பிரும்மத்தைக் குறிக்கும். ஹ்ரீம் சகுண பிரும்மத்தைக் குறிக்கும்.

இது மிக சக்தி வாய்ந்ததாகையால், பஞ்சதசியில் ஒவ்வொரு கண்டத்தின் முடிவிலும் இடம் பெறுகிறது.

ஸ்ரீம் - லக்ஷ்மி பீஜம்

க்லீம் - மன்மத பீஜம்

ஹ்ரீம் - சிவசக்தி பீஜம்

சரீரத்தில் ஸ்ரீ சக்ரத்தை பாவித்து பூஜிப்பதும் வெளியில் ஸ்ரீ சக்ரத்தை வைத்து பூஜிப்பதும் மிச்ரமதம். உடம்பில் மட்டும் பூஜிப்பது சமய மதம். வெளியில் மட்டும் பூஜிப்பது கௌலமதம்.

நடராஜர் உடுக்கையிலிருந்து வெளிப்பட்ட சிவ ஸூத்திரங்களில் ணு, கூ, லூ போன்ற அக்ஷரங்களை நீக்கி கணக்கு செய்தால் 43 அக்ஷரங்கள் தான் பூர்ண உருவத்துடன் இருக்கும். இது 43 முக்கோணங்களையே குறிப்பிடுகின்றன.

காமகலா விலாசத்தில் சப்த பிரும்மமான மத்யமையிலிருந்து 42 அக்ஷரங்கள் வெளியானதாகவும், அவை முறையே 14 கோணங்களாகவும், உள், வெளி என்ற இரு 10 கோணங்களாகவும் 8 கோணங்களாகவும், ஆயின என்று கூறுகிறது.

சிவ ஸூத்திரங்களில் "ஹ" காரம் இரண்டு வருகின்றன. அ, இ, உண் என்று ஆரம்பித்து "ஹல்" என்று முடிவடைகிறது. முதல் எழுத்தான "அ" வையும் கடைசி எழுத்தான "ஹ" வையும் சேர்த்தால் அஹம் என்றாகிறது. ஸ்ரீ வித்யோபாசனையிலும் "அஹம் ப்ரஹ்மாஸ்மி" என்ற பதமே எல்லையாகக் குறிப்பிடப்படுகிறது. ஆகவே சிவ ஸூத்திரங்களில் வரும் 43 அக்ஷரங்களும் 43 கோணங்களுடன் கூடிய ஸ்ரீ சக்ரத்தையே குறிப்பிடுகின்றன.

நடராஜர் தன் உடுக்கையை முதலில் 9 தடவையும் பின்னர் 5 தடவையும் அடித்தது. இந்த 43 சக்ரங்களில் "நவயோந்யாத் மகம் சக்ரம்" என்னும் பிரமாணத்தின் படி ஒன்பது கோணங்களை கொண்ட 9 சக்கிரங்கள் பிரதானம் என்பதக் காட்டவும், அதில் சக்தி சக்ரங்கள் 5 என்பவை மிகவும் பிரதானம் என்பதைக் காட்டுவதற்காகவே என்று கூறப்படுகிறது.

பஞ்சதசி அக்ஷரங்களை புனருத்தி இல்லாமல் கணக்கு செய்தால் 9 தான் வரும். இதற்கு மேரு மந்திரம் என்று பெயர். இந்த மேரு மந்திரம் எல்லா மந்திரங்களுக்கும் காரணம் என்று தந்திரங்கள் கூறுகின்றன.

சப்தங்களில் வேத சப்தமே சிறந்தது. அவற்றில் பல தேவதா மந்தரங்களை விட லலிதா தேவியின் மகா மந்திரங்களே சிறந்தவை. அவைகளில் மிகச் சிறந்தது மந்திர ராஜம். (காதி, ஹாதி, ஸாதிவித்யா)

பஞ்சதசாக்ஷரீ, ஷோடசாக்ஷரிக்கே மந்திர ராஜம் எனப்பெயர்.

## சிருஷ்டி தத்துவம்

ஒன்றிலிருந்து பல உருவாகிறது. ஆனால் இரண்டின்றி ஒன்று இருக்க முடியாது. ஒன்று ஒன்றாகவே இருந்து விட்டால் சிருஷ்டி நடைபெறாது. பரிணாம சிருஷ்டிக்கு அணுக்களின் அசைவு முக்கியம். இது சப்தமயமாய் இருக்கிறது. ஒவ்வொன்றிற்கும் பொருளின் உணர்வு இருப்பதால், அவை அர்த்த மயமாய் இருக்கிறது. சப்தமயம், பரா, பச்யந்தி, மத்யமா, வைகரியாக இருக்கிறது.

சுயமாகவே பிரகாசித்துக் கொண்டிருந்த பிரகாச பிரும்மம், விமர்ச சக்தியினால் தன்னை அசைவித்து சிவம் சக்தியாகப் பிரிந்து விட்டது.

பிரகாச சிவத்தைக் குறிப்பிடும் எழுத்து "அ" விமர்ச சக்தியைக் குறிப்பிடும் எழுத்து "ஹ" இந்த இரண்டும் இணைந்ததே "நான்" (அஹம்) இந்த நானாகிய அஹம் இந்த பிரபஞ்சமே.



சூரியன் தன் தேஜஸை அக்னி கலையாகவும், சந்திர கலையாக பரப்புகிறான். சிவப்பான அக்னி கலையும், வெண்மையான சந்திர கலையும் ஒன்றாகி மிச்ரகலையான "அஹம்" ஆகிறது. இதுவே ரக்த சரணம், சுக்ல சரணம் என்ற குரு பாதுகைகளாக விளங்குகின்றன.

பெயர் உருவம் என்பவற்றை பிரித்துக் காண இயலாத நிலையில் இறைவனுடன் ஒன்றி இருக்கும் நிலை "அவிபக்த தமஸ்" எனப்படும். இதுவே மூலப்ரக்ருதி.

மூலப்பிரக்ருதியின் ஸ்தூல நிலை "விபக்த தமஸ்" விபக்த தமஸின் ஸ்தூல நிலை அக்ஷரம்.

அக்ஷரத்தின் ஸ்தூல நிலை அவ்யக்தம். இதற்கு மேலுள்ள நிலை அகங்காரம்.

அம்பிகையின் ஸ்ரீ சக்ரத்திற்கு யந்திர ராஜம் என்ற பெயர் உண்டு. இது பஞ்சதசாக்ஷரி மந்திர ரூபத்தில் பின் கண்டவாறு அமைந்திருப்பதாக வரிவஸ்யா ரஹஸ்யத்தில் கூறப்பட்டுள்ளது.

1. க, க, க, ஈ அக்ஷரங்கள் ஸ்ரீ சக்ரத்தின் பிந்து.
2. ஹ்ரீம், ஹ்ரீம், ஹ்ரீம், ஸ்ரீ சக்ரத்தின் திரிகோணம், அஷ்டகோணம்
3. ஹ, ஹ, ஏ, ஸ்ரீ சக்ர உட்புற தசகோணம், வெளிப்புற தசகோணம், 14 கோணம்.
4. ஸ, ஸ, ஸ்ரீ சக்ர 8 தள கமலம், 16 தள கமலம்.
5. ல, ல, ல, ஸ்ரீ சக்ரத்தில் பூபுரம்.

பூர்த்தி வித்யை என்றும், குஹ்ய வித்யை என்றும், பிரும்ம வித்யை என்றும், புகழப்பட்ட இந்த ஸ்ரீ வித்யா கிரமப்படி, பாரம் பர்ய மார்க்கத்தில் நன்கு அப்யஸித்த குருவினிடம் பூரண தீக்ஷை பெற்று, நியாசங்கள் செய்துக் கொண்டு, ஸ்ரீ சக்ர மேரு நவாவரண பூஜைகள் சம்பிதாயப்படி செய்து, ஸ்ரீ மகா பாதுகா மந்திரம், அங்க தேவதா மந்திரங்கள், பஞ்சதசீ, ஷோடசீ ஜபங்கள், இவைகளைச் செய்பவர்களை அம்பிகை ஒரு நாளும் கைவிட மாட்டாள். பலன் எதையும் எதிர் பார்க்காமல் செய்வது விசேஷம்.

---

## திரிபுரா ரகசியம்

அம்பிகை மும்மூன்றாக இருப்பதின் தத்துவார்த்தம்

## சிதம்பர ரகசியம்

ஸ்ரீ வித்யைக்கான முக்கிய க்ஷேத்திரம் சிதம்பரமே



# ஸ்ரீ வித்யா உபாஸனா ரஹஸ்ய விளக்கம் 2

வித்யானாஞ் ச மனூனாம்
மனுஸங்க்யானாஞ் ச வித்யானாம் !
உபதேஷ்டா ஜயதிதராம்
நரஸிம்ஹானந்தநாத குரு !! - ஸ்ரீ குரு ஸ்தோத்ர மங்களம்

வரிவஸ்யா என்றால் உபாஸனை என்று பொருள். ஸ்ரீ பாஸ்கரராயர், தான் இயற்றிய இந்நூலில் ஸ்ரீ வித்யா உபாஸனையின் ரகசியங்களை விளக்குகிறார்.

முதலில் தன் குரு நாதர் நரஸிம்மானந்த நாதர் வணக்கத்துடன் பாஸ்கரராயர் இந்நூலை ஆரம்பிக்கிறார்.

இந்நூலில் பின்வரும் தலைப்புகளில் உபாஸனா முறை விளக்கப் பட்டுள்ளது.

முதல் அம்சம்:- விமர்சாத்மக சக்தி ஸ்வரூபம், காயத்ரீயும் ஸ்ரீ வித்யையும், ஹ்ரீம்கார ஸ்வரூபம், மந்திராக்ஷரங்களின் வர்ணங்கள், இவைகளின் ஸ்தான ரூபம், உச்சரிப்பு, பிந்து ஸ்வரூபம், ஐந்து அவஸ்தைகள், தியான முறைகள்.

இரண்டாவது அம்சம்:- அர்த்த ஞான அவசியம், பாவார்த்தம், ஸம்ப்ரதாய அர்த்தம், நிகர்ப்பார்த்தம், கௌலிகார்த்தம், ரகஸ்யார்த்தம், சாக்தார்த்தம், ஸமஸ்தார்த்தம், ஸகுணார்த்தம், மகா வாக்யார்த்தம்.

எல்லா உபாசனா மார்க்கங்களுக்கும் மந்திரங்களுக்கும் 14 * என்ற கணக்குடைய வித்யா ஸ்தானங்களுக்கும் உபதேச கர்த்தாவான குருநாதர் வெற்றியுடன் விளங்கட்டும் என்பது மேற்கண்ட சுலோகத்தின் பொருள்.

இங்கு "மநு" என்று வார்த்தை 14ஐ குறிப்பிடுகிறது. மன்வந்திரங்கள் 14, 14 மநுக்களாவன:-

1. ஸ்வாயம்புவ மநு

பிரும்ம புத்திரர் சத ரூபையின் பதி. மனிதர்கள் பின்பற்ற வேண்டிய சட்ட திட்டங்களை மநு ஸ்மிருதி என்ற பெயரால் வெளியிட்டவர்.

## 2. பிரியவிரத மநு

தன் ஆளுகையில் எங்கும் சூரிய வெளிச்சம் இருக்க வேண்டும் என்று விரும்பினான். சூரியனைப் போல பிரகாசிக்கும் தேரில் ஏறி யோக சக்தியால் பூமியை ஏழு முறை சுற்றி வந்தான்.

## 3. உத்தம மநு

கங்கைக் கரையில் மூன்றாண்டு நியமத்துடன் தேவியை வாக்பவ பீஜத்தால் ஆராதித்தார். தேவி மந்வந்த்ர ஆதிபத்யம் அளித்தாள்.

## 4. தாமஸ மநு

இவர் நர்மதை நதிக் கரையில் தேவியை காம பீஜத்தால் ஆராதித்தார்.

## 5. ரைவதர் மநு

4-வது மநு சகோதரர் ரைவதர். இவரும் காம பீஜத்தால் அம்பிகையை ஆராதித்தவர்.

## 6. சாக்ஷுஸ மநு

புலஹர் குரு. வாக்பவ பீஜத்தைக் கொண்டு தேவியை ஆராதித்தவர்.

7. வைவஸ்வத மநு

8. ஸாவர்ணிக மநு

இனி 6 மநுக்கள் ஏற்படவிருக்கின்றனர்.

ஃ ஃ ஃ ஃ

உபாசனை செய்பவர் முதலில் அதன் தத்வார்த்தங்களையும் தாத்பர்யங்களையும் நன்கு அறிந்துக் கொள்ள வேண்டும்.

முதலில் தன் குருநாதர் ஸ்ரீ நரசிம்மானந்த நாதருக்கு வணக்கம் கூறுகையில் அவரை பிரகலாதனுக்கு அருளிய நரசிம்ம மூர்த்தியுடன் ஒப்பிடுகிறார்.

| | |
|---|---|
| பிரகலாதனுக்கு | பாஸ்கரராயருக்கு |
| அருளியவர் | அருளியவர் |
| நரசிம்மஸ்வாமி, | நரசிம்மாநந்தர் |
| தேவர்களால் துதிக்கப்பட்டவர் | வித்வத் சமூகத்தினரால் துதிக்கப் பட்டவர் |

அடுத்ததாக சேது முதல் இமாசலம் வரை, காந்தாரம் முதல் காம ரூபம் வரை, இப்பாரத புண்ணிய பூமியிலுள்ள வித்வான்களுக்கு இந்த நூல் மகிழ்ச்சியைத் தரட்டும் என்கிறார். இங்கு வித்வான்கள் என்று குறிப்பிட்டது ஸ்ரீ வித்யோபாஸகர்களையே குறிக்கும்.

பிரகாச விமர்ச ரூபம்

ஸ ஜயதி மஹாபன் ப்ரகாசோ யஸ்மின்
த்ருஷ்டே ந த்ருச்யதே கிமபி !
கதமிவ தஸ்மின் ஜ்ஞாதே ஸர்வம்
விஜ்ஞாத முச்யதே வேதே !! 3

எது காணப்பட்டால் வேறு எதுவும் காணப்படுவதில்லையோ அந்த பரம்பொருள் வெற்றியுடன் விளங்கட்டும். அப் பரம்பொருள் அறியப் பட்டால் எல்லாம் அறிந்ததாக ஆகும்.

இங்கு பிரும்மம் என்பது விளக்கப்படுகிறது. ஆதியில் இந்த பிரும்மம் மட்டுமே இருந்தது. பின்னர் இது சிவம் சக்தியாக பிரிந்தது. மறுபடியும் அர்த்தநாரீஸ்வரராக இணைந்து பிரும்மமாயிற்று.

நைஸர்க்கிகீ ஸ்ப்புரத்தா விமர்ச
ரூபாஸ்ய வர்த்ததே சக்தி:
தத்யோகா தேவ சிவோ ஜக
துத்பாதயதி பாதி ஸம்ஹாதி !! 4

இப் பிரும்மத்திற்கு விமர்ச வடிவான சக்தி உள்ளது. அத்துடன் கூடியே சிவம் என்னும் பிரும்மம் இந்த உலகத்தை உத்பத்தி செய்கிறது. காப்பாற்றுகிறது; அழிக்கிறது.

சக்தியுடன் கூடிய இப் பிரும்மத்தை அறிந்தால் எல்லாம் அறியப் பட்டதாகும். பிரும்மமே பிரகாச விமர்ச வடிவாகத் தோற்றமளிக்கிறது. பிரகாசம் என்பது சிவம்; விமர்சம் என்பது சக்தி.

பரப்பிரும்மம் சிவசக்தி சம்மேளன ரூபம் என்பது ஸ்ரீ வித்யையின் சித்தாந்தம். இதில் சிவன் வேறு. சக்தி வேறு இல்லை. அம்பிகையை "பிரகாச விமர்ச சாமரஸ்ய ரூபிணி" என்று சொல்வது வழக்கம்.

பஞ்சவித க்ருதயங்கள் செய்யும் ஆற்றலை ஏற்படுத்துவதால் அம்பிகை விமர்ச ரூபணி எனப்படுகிறாள்.

ஸ்வாபாவிகீ ஸ்புரத்தா விமர்ச ரூபாஸ்ய வித்யதே சக்தி.
ஸைவ சராசரமகிலம் ஜநயதி ஜகதேததபி ச ஸம்ஹாதி
- ஸௌபாக்ய ஸுகோதயம்.

விமர்சம் என்பது வார்த்தைகளையும் குறிக்கும். வார்த்தை அர்த்தம் இரண்டும் கலந்திருப்பதையே சிவசக்தி ஐக்யம் குறிப்பிடுகிறது. வாக்கு விமர்ச ரூபிணியான அம்பிகை; அர்த்தம் பிரகாச ரூபமான பரமேஸ்வரர்.

பிரும்மமே பிரகாச, விமர்ச வடிவாகத் தோற்றமளிக்கிறது. பிரகாசம் என்பது சிவம், விமர்ச்சம் என்பது சக்தி.

ஸ்வாத்மைவ தேவதா ப்ரோக்தா லலிதாவிச்வ விக்ரஹா !
லௌஹித்யம் தத்விமர்ச: ஸ்யாத் உபாஸ்திரிதி பாவனா
- ஸ்வதந்திர தந்திரம்

ஸ்வயம் ஹி த்ரிபுரோதேவி லௌஹிதயம் தத் விமர்சனம்
- வாமகேச்வர தந்திரம்.

இம் மாதிரி ப்ரகாசம் விமர்சம் இவ்விரண்டின் சாமரஸ்யத்தோடு கூடிய அம்பிகை ஸ்தூலம், ஸூக்ஷமம், பரம் என்ற மூன்று வித ரூபங்களைக் கொண்டிருக்கிறாள்.

## அம்பிகையின் ஏழு வடிவங்கள்

அம்பிகை ஏழு வடிவங்களில் இருப்பதாக "குஹ்ய நாம ஸாஹஸ்ரம்" (195 - 199 ச்லோகங்களில்) குறிப்பிடுகிறது. அவை ஒவ்வொன்றிலுமுள்ள அவளது மகிமைகளை அறிய முதலில் அந்த ஏழு வடிவங்களைப் பற்றித் தெரிந்துக் கொள்ள வேண்டும்.

1. ஸ்தூல தம வடிவம்

சிற்பி தன் அறிவுத் திறமும், கைத் திறமும் கொண்டு உருவாக்கிய வடிவம். (பஞ்சலோகம், வெள்ளி, தாமிரம், தங்கம், கருங்கல், சலவைக் கல், ஸ்படிகக் கல், மாணிக்கம், இவைகளில் இருக்கலாம்) சித்திரங்கள், படங்கள் ஆகியவைகளும் இவ்வகையைச் சேர்ந்ததே.

நமக்கு இருப்பவை போன்ற தலை, கை, கால், மூக்கு இவை எல்லாம் உடைய நிலையில் திவ்ய சௌந்தர்யமுடையதாகக் கொள்ளப் படுவது ஸ்தூல தம வடிவம். ஸௌந்தர்ய லஹரியில் 42-வது (கதைர் மாணிக்யத்வம்) ச்லோகம் முதல் 91-வது (பத ந்யாஸக்ரீடா) வரை அம்பிகையின் ஸ்தூல தம ரூபம்தான் வருணிக்கப்படுகிறது. லலிதா ஸஹஸ்ர நாமத்தில் 6-வது நாமம் முதல் 63-வது நாமம் முடிய இவ் வடிவத்தின் வருணனையைக் காண்கிறோம்.

இறைவன் வழிபாட்டில் தொடக்க நிலையில் உள்ளவர்களுக்கு இவ் வடிவ வழிபாடே தக்க பலன் தருவதாகும். இந்த வடிவத்தை இடைவிடாமல் தியானிப்பதன் மூலம் தன் மனமே கடவுளாக உருவாகிறது. தனக்குப் புதிதாக ஏற்படும் ஆற்றல்களும் தன் மனத்தில் ஏற்கனவே மறைந்திருந்த ஆற்றல்களே. இதை நாம் அறிவதில்லை.

2. ஸ்தூல தர வடிவம்:-

ரேகா ரூபத்தில் அன்னையின் உருவம் கொடுக்கப்படுகிறது. இதுதான் சக்ரம் அல்லது யந்திரம். ஸ்ரீ சக்ரம் அன்னையின் திரு மேனியேதான். மேருவும் ஸ்தூல தரம்தான்.

3. ஸ்தூல வடிவம்:-

வெளியே அம்பிகையின் உருவத்தையோ, சக்ரத்தையோ வைத்து வழிபடாமல், இதயத் தாமரையில் உருவத்தையோ, யந்திரத்தையோ தியானிப்பது ஸ்தூல வடிவம்.

4. ஸூக்ஷ்ம வடிவம்:-

அம்பிகை மந்திர ரூபிணி. ஆனால், அம் மந்திரத்தின் ஒலி (நாதம்) ஸூக்ஷ்ம ரூபமாகிறது.

ஆனால் அதே மந்திரத்திற்கு வரி வடிவு கொடுத்து எழுதினால் அதுவே ஸ்தூலமாகிறது. ஸூக்ஷ்ம வடிவமான மந்திரத்தில் ஒலியே முக்கியமானது. இந்த ரூப வடிவங்கள் விவரம் பிரதிபாவின் "ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி"யில் விவரிக்கப்பட்டுள்ளது.

அம்பிகை பரசித் ரூபமாக எல்லாப் பொருள்களிலும், ஷடங்க ரூபமாகவும், ஷோடச திதி நித்யா ரூபமாகவும், திவ்யௌகம், ஸித்தௌகம், மானவௌகம் என்னும் குரு மண்டல ரூபமாகவும் விளங்குகிறாள். இவளே பஞ்சாயதன ரூபமாகவும் நிகழ்கிறாள்.

## இந்த சித்சக்தி அறியப்பட வேண்டும்

ஸாவச்யம் விஜ்ஞேயா
யத்பரிணாமா தபூதேஷா
அர்த்தமயீ சப்தமயீ சக்ரமயீ
தேஹமய்யபி ச ஸ்ருஷ்டி: !! 5

பிரகாசம், விமர்சம் என்பதை தமிழ் இலக்கண குறிப்பு மூலம் சுலபமாக விளக்கலாம்,

ஸ்கந்தன் ஓடுகிறாள்
ஸ்கந்தன் தூங்குகிறான்
ஸ்கந்தன் படிக்கிறான்

இவைகளில் ஸ்கந்தன் பெயர்ச் சொல். ஓடுகிறான், தூங்குகிறான் முதலியவை வினைச் சொல், வினைச் சொல் சேராவிடில் ஸ்கந்தன் என்ன செய்கிறான்? என்பதைக் கூற முடியாது. இங்கு பெயர் சொல் சிவம், வினைச் சொல் சக்தி. சிவத்தை செயல்படுத்துவது சக்திதானே.

இதையே ஆதி சங்கரர் தன் ஸௌந்தர்ய லஹரி முதல் ச்லோகத்தில்,

சிவ: சக்தியா யுக்தோ யதிபவதி சக்த ப்ரபவிதும்
ந சே தேவம் தேவோ நகலு குசல: ஸ்பந்திதுமபி - என்கிறார்.

யாரைக் குறித்து உபாஸிக்கிறோம்? அம்பிகையைக் குறித்து அவள் யார்? அவளே சித் சக்தி.

இந்த சித் சக்தி எப்படி விளங்குகிறது? இந்த உடலில் 36 தத்துவங்களாகவும் (அர்த்தமயீ)

பரா, பச்யந்தி, மத்யமா, வைகரீ, என்ற சப்த ரூபமாகவும் (வாக்மயீ) ஸ்ரீ சக்ர வடிவமாகவும் (சக்ரமயீ) ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற தேஹ வடிவமாகவும் (தேஹமயீ) விளங்குகிறது.

இந்த சித்சக்தி முதலில் ப்ரதானமாகவும் ஒன்றாகவும் இருந்தது. அதுவே பத்ராதிகளான 9 ஆயிற்று. பிறகு ஞானேந்திரியம், கர்மேந்திரியம், பிராண பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயம் என்னும் பேதத்தால் 19 ஆகிறது. உடலில் இயங்கும் பல சக்திகளின் ஸ்வரூபமாகவும் இதுவே இருக்கிறது.

பின் ஞான, கிரியா, இச்சா ரூபமான ஞானம், விஞ்ஞானம், ஸம்க்ஞானம் என்ற மூன்று சக்திகளும் சித்சக்தியில் அம்சங்களே.

## காயத்ரியும் ஸ்ரீ வித்யையும்

இந்த சித் சக்தியை அறிய 14 வித்யைகளின் சாரமாக உள்ளது காயத்ரீ, (14 வித்யைகள் - வேதம் 4, வேத அங்கம் 6, மீமாம்ஸா 1, நியாய சாஸ்திரம் 1 தர்ம சாஸ்திரம் 1 புராணம் 1)

இத் காயத்ரீயின் ரூபங்கள் இரண்டு. 1. வேத சாரம். 2. ஸ்ரீ வித்யை.

இதைக் குறிப்பிடும் சுலோகங்கள்

தஜ்ஜ்ஞானார்த்த முபாயா வித்யா
லோகே சதுர்த்தச ப்ரோக்தா: !!
தேஷ்வபி ச ஸாரபூதா
வேதாஸ் தத்ராபி காயத்ரீ !! 6

தஸ்யா ரூப த்விதயம் தத்ரைகம்
யத்ப்ரபட்யதேஸ்பஷ்டம் !!
வேதேஷு சதுர்ஷ்வபி பர
மத்யந்தம் கோபனீய தரம் !! 7

---

விளக்கம் பிரதிபாவின் "சிங்கேரி சாரதா"வில் காண்க.

ந காயத்ரயா: பரம் ஜப்யம் என்பதை அனுசரித்து காயத்ரீ மந்திரத்திற்கு மேலான மந்திரமில்லை என்பது சித்தமாகும். அக் காயத்ரீ மந்திரமும் தற்காலத்தில் மூன்று பாதங்களாகக் கூடினதாகத்தான் இருக்கிறது. நான்காவது பாதம் ரகசியமாகத்தான் இருந்து வருகிறது. ஸம்பூர்ண காயத்ரீயை மூன்று தடவை ஜபம் செய்வதும் ஒரு தடவை ஸ்ரீ வித்யை என்ற பஞ்சதசியை ஜபம் செய்வதும் சமானமாகவே ஆகிறது.

பஞ்சதசியின் ஒவ்வொரு கண்டத்திலும் சம்பூர்ண காயத்ரீ மகா மந்திரத்திற்கு அந்தர் பாவத்தை மகான்கள் ஒப்புக் கொள்கிறார்கள். இதற்கு தேவி சம்பந்தமான உபநிஷத்துக்களே பிரமாணமாகும்.

ஓம் தத்ஸதிதி நிர்தேச: !
ப்ரஹ்மண: த்ரிவித: ஸ்ம்ருத: !! ஸ்ம்ருதி

ததிதி பிரும்ம சாச்வதம் !! - ச்ருதி

இவைகளை அனுசரித்து "தத்" என்ற பதம் பரப்பிரும்மத்தைக் குறிக்கிறது என்று ஏற்படுகிறது. காயத்ரியில் "தத்" என்பது முதலாவது பதமே யாகும். ஸ்ரீ வித்யா மந்திரத்தின் முதல் அக்ஷரம் "க" காரம்.

"கம் பிரும்ம" என்ற ச்ருதியை அனுசரித்தும் "காமயதே காமீஜாயதே ஸ ஏஷ நிரஞ்சன: காம ககாரம் ஆப்நோதி" என்ற ச்ருதியை அனுசரித்தும் "க" காரத்திற்கு காமேச்வரன் என்ற பரப் பிரும்மமே அர்த்தம் எனத் தெரிகிறது. ஸ்ரீ வித்யையில் முதல் அக்ஷரம் அந்த பரப்பிரும்மத்தையே குறிப்பிடுகிறது. ஆகவே காயத்ரியிலுள்ள "தத்"தும் பஞ்சதசியிலுள்ள "க"வும் ஒன்றேயே குறிப்பிடுகின்றன.

காயத்ரியில் 2-வது பதம் ஸவிது: ஜகத்தினுடைய சிருஷ்டி அதற்கு காரணமான யோநி. அதாவது ஜகத் காரணமான யோக மாயை.

வரேண்யம் என்றால் சிரேஷ்டம். ஜகத் காரணத்திற்கு சிரேஷ்டமாக உள்ளது சக்தி என்பதை இது குறிப்பிடுகிற்து.

இந்த ஸவது: வரேண்யம் என்பதால் எந்த சக்தி சொல்லப்படுகிறதோ அதையே "ஏ" குறிப்பிடுகிறது. "ஏ" என்பது ஸ்ரீ வித்யா சித்தாந்தப் பிரகாரம் திரிகோண ரூபிணியான காமேஸ்வரியையே குறிக்கும்.

காயத்ரியில் நான்காவது பதம் பர்க. ஸ்ரீ வித்யா மந்திரத்தில் மூன்றாவது எழுத்தான ஈ என்பது அகராதி எழுத்துகளில் நான்காவதாகும். இது தஹர ஆகாய ரூபிணியான பராசக்தியைக் குறிப்பிடும். பர்க என்ற பதத்தின் அர்த்தமும் இந்த பராசக்தியையே குறிப்பதாகும்.

தீமஹி என்று காயத்ரியில் ஒரு பதம் இருக்கிறது. தீ, மஹி என்று இதை இரண்டாகப் பிரித்துக்கொள்ள வேண்டும். சர்வ ஜகத்தையும் தரிக்கும் பொருள் என இதற்கு அர்த்தம். ஈ என்ற அக்ஷரத்திற்கும் இதே அர்த்தம்.

மஹீ என்றால் பூமி (பிருத்வி) என்று அர்த்தம். மற்ற நான்கு பூதங்களையும் சேர்த்தே பொருள் கொள்ளவேண்டும். சகல ஜகத்தையும் பாவிக்கும் பொருள், ஸ்ரீ வித்யா மந்திரத்தில் பிருத்வி பீஜமான "ல" இதைக் குறிக்கிறது.

தியோ யோந ப்ரசோதயாத் என்ற காயத்ரீ பதங்களுக்கு மோக்ஷம் என்ற சாதனத்திற்கு ஞானம் தருபவன் என்று அர்த்தம். காயத்ரீயில் உள்ள 3-வது, 4-வது பாதங்களில் அர்த்தம் இரண்டும் "ஹ்ரீம்" என்ற பதத்தில் "ஹ" காரம் ரேபம் இரண்டும் சேர்ந்து ஹிருதயத்தைப் போதிக்கின்றன. இந்த ஹிருதயத்தில் வசிக்கும் பராசக்தியை "ஈ" காரமும் பிந்துவும் போதிக்கின்றன.

ஹிருதயாகாசவாசினியான பராசக்தியே பிராணிகளுடைய புத்தியை பிரும்மத்தினிடம் ஈடுபடச் செய்யவேண்டும். ஸ்ரீ என்ற பதத்திற்கு முக்தி என்ற பொருளைக் கொண்டால், முக்தியைக் கொடுக்கும் வித்யை ஸ்ரீ வித்யைதான் என்பதை அறியலாம்.

## வேதம் குறிப்பிடும் ஸ்ரீ வித்யை

இந்த ஸ்ரீ வித்யையை வேதங்கள் மறைமுகச் சொற்களால் குறிப்பிடுகின்றன.

காமோ யோநி: கமலேத்யேவம்
ஸங்கேதிதை: சப்தை: !
வ்யவஹரதி ந து ப்ரகடம்
யாம் வித்யாம் வேத புருஷோபி !! 8

இதன் அர்த்தம்:- வேத புருஷன் ஸ்ரீ வித்யையை சங்கேத வார்த்தைகளால் குறிப்பிடுகிறார். ரகசிய சப்தங்களால் ஸ்ரீ வித்யை குறிப்பிடப்படுகிறது.

| | |
|---|---|
| காம - க | ஹஸா - ஹ, ஸ |
| யோனி - ஏ | மாதரிச்வா - க |
| கமலா - ஈ | அப்ரம்- ஹ |
| வஜ்ரபாணி - ல | இந்திர - ல |
| குஹா - ஹ்ரீம் | புனர் குஹா - ஹ்ரீம் |
| | ஸகல - ஸ, க, ல மாயயாச - ஹ்ரீம் |

மந்திர சாஸ்திரத்தில் அக்ஷரங்களுக்கெல்லாம் சங்கேதப் பெயர்கள் உண்டு.

மேற்குறிப்பிட்ட இந்த சங்கேத வார்த்தைகள் திரிபுரோப நிஷத்தில் உள்ளது.

காமோ யோநிர் கமலா வஜ்ரபாணிர் குஹா ஹஸா மாதரிச் வாப்ர மிந்த்ர: ! புனர்குஹா ஸகலா மாயயா ச புருச்யேஷா விச்வ மாதாதி வித்யா !!

இதை "ஆதி மூல வித்யா" என்பர். இது தேவி உபநிஷத்திலும் உபதேசிக்கப்பட்டிருக்கிறது.

காம - (க) யோநி - (ஏ) கமலா - (ஈ) வஜ்ரபாணி - (ல) குஹா - (ஹ்ரீம்) ஹஸா - (ஹ, ஸ) மாதரிச்வா - (க) அப்ரம் - (ஹ) இந்த்ர - (ல) புனர்குஹா - (ஹ்ரீம்) ஸகலா - (ஸ, க, ல) மாயாச - (ஹ்ரீம்)

இந்த ஆதிவித்யையே ஆத்ம சக்தி. இதில் 6-வது அக்ஷரமாகிய சிவ பீஜத்தையும், 7-வது அக்ஷரமாகிய சக்தி பீஜத்யையும் வஹ்னி ஸாரதி என்கிற காமேச பீஜத்தையும் ஆக மூன்றையும் சேர்த்து "மூலத்ரிகம்" என்று கூறப்படும். இந்த மூன்று அக்ஷரங்களையும் வெகு ரகசியமாக ஜபம் செய்கிறவர்கள் கைவல்யத்தை அடைகிறார்கள். (விதேக முக்தர்களாகிறார்கள்)

இதை ஆதிசங்கரர் தன் ஸௌந்தர்யலஹரி 32-வது சுலோகத்தில் குறிப்பிடுகிறார்.

சிவசக்தி: க ம: க்ஷிதிரத ரவிச்சீத கிரண:
ஸ்மரோ ஹம்ஸ: சக்ரஸ்ததநுச பராமாரஹரய: !
அமீஹ்ருல்லேகாபி: திஸ்ருபி: அவஸாநேஷு கடிதா:
பஜந்தே வர்ணாஸ்தே தவஜநதி நாமாவயவதாம் !!

க ஏ ஈ ல நான்கு அக்ஷரங்களும் முதல் பாகம்.
ஹ, ஸ, க, ஹ, ல என்ற ஐந்து அக்ஷரங்களும் இரண்டாம் பாகம்.
ஸ, க, ல என்ற மூன்று அக்ஷரங்களும் மூன்றாம் பாகம்.

முடிவுகளில் ஹ்ரீம் சேர்த்தால் பஞ்சதசாக்ஷரீ மகா வித்யை.

முதல் பாகம் அக்னி கண்டம்.
இரண்டாவது பாகம் சூரிய கண்டம்
மூன்றாவது பாகம் சந்திர கண்டம்

ஞான சக்தி, இச்சா சக்தி, கிரியா சக்தி என்ற மூன்று வித பராசக்தி ருபமே இம் மகா மந்திரமாகும்.

இம் மகா மந்திரத்தில் திரிகுணாத்மகம், அவஸ்தாத்ரியாத்மகம் த்வம் பதார்த்த ஸ்வரூபம், சக்தி த்ரயாத்மகம், அக்னி, சூர்ய, சந்திராத்மகம் என்ற விசேஷங்கள் எல்லாம் அடங்கியுள்ளது.

லோகமாதாவின் இம் மாத்ருகா மந்திரம் மூன்று கண்டங்களாக (கூடங்களாக)ப் பிரிக்கப்பட்டுள்ளது.

திரி கண்டோ மாத்ருகா மந்திர:
ஸோம ஸூர்யா நலாத்மக: !!

என்பதே இதற்குப் பிரமாணம். ஆரோகண கிரமத்தில் அக்னி சூரியன், சந்திரன், அவரோகணத்தில் சந்திரன், சூரியன், அக்னி இந்த மூன்று கண்டத்திற்கு மேல் ஒரு கண்டம் உள்ளது. அதுவே சந்திர கலா கண்டம்.

ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி இம் மூன்று வித அவஸ்தைகள். இந்த அவஸ்தைகளின் அபிமானிகளான விச்வன் தைஜஸன் பிராக்ஞன் என்ற மூன்று விதமான த்வம் பதார்த்தங்களும் மூன்று வித அவஸ்தைகளுக்குக் காரணமான ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களும் இந்த மந்திரத்தில் அடங்கி விட்டன.

அ, உ, ம என்ற மூன்று வர்ணாத்மகமான (ஸவர்ண பிரணவ) ரூபமாகவும் இம் மகாமந்திரம் விளங்குகிறது.

இம் மூன்று கண்டங்களுக்கு மேல் நான்காவதாக துரீய கண்டம் ஒன்று இருப்பது ஏற்படுகிறது. இது ரகசியமாக இருக்க வேண்டும் என்பதாலேயே ஆதிசங்கரர் இதைப் பிரகாசப்படுத்தவில்லை. இந்த நிலை அனுபவ மூலம் ஏற்பட வேண்டும்.

ஷோடசியில் 16 அக்ஷரங்கள் அடங்கியுள்ளன. இந்த 16 அக்ஷரங்கள் 16 நித்யா * தேவதைகளாகிறார்கள், இதில் 16-வது அக்ஷரம் சந்திர கலா ரூபம். இதுவே "ஸாதா பரா" எனப்படும். இக்கலை "கேவல சிதேகரஸ பரப்பிரும்ம" ரூபமாகும். இந்த 16-வது அக்ஷர தேவதைக்கு மற்ற 15 அக்ஷர தேவதைகளும் அங்கங்களாகிறார்கள்.

இந்த 16 அக்ஷரரூபிணியான கலை 16 தளங்களோடு கூடின விசுத்தி சக்ரத்தில் சாயாரூபமாக விளங்கி வருகிறது.

இந்த சந்திரகலை என்ற பீஜாக்ஷரம் உத்தமாதிகாரிகளுக்குத் தான் உபதேசிக்கப்படவேண்டும். இக் கலை சகாரரேப ஈகார பிந்து ரூபமே:

* முழு விவரங்களுக்கு "பிரதிபா"வின் "திதி நித்யா"வைக் காணவும்.

இந்த அக்ஷரத்தைச் சேர்த்தால் சிவ: சக்தி: என்ற ச்லோகத்தால் ஷோடசாக்ஷரி பிரகாசப் பட்டதாக ஆகிறது.

## வாக்பவ கூடம்

க்ரோதீச: ஸ்ரீ கண்ட்டாருட:
கோணத்ரயம் லக்ஷ்மீ: !
மாம்ஸ மனுத்தர: ருடம் வாக்பவ
கூடம் ப்ரகீர்த்திதம் ப்ரதமம் !! 9

முதல் கூடமான வாக்பவத்தில் க, ஏ, ஈ, ல எழுத்துகள் உள்ளன. அதை இந்த எழுத்துக்களுக்கான சங்கேதப் பெயர்களை கொண்டு சொல்லப்படுகின்றன.

க்ரோதிச: .......... ஆருட - "க" கோணத்ரயம் - முக்கோணம் அல்லது யோனி, "ஏ" லக்ஷ்மீ - "ஈ" மாம்ஸம் - "ல"

## காமராஜ கூடம்

சிவ ஹம்ஸ பிரஹ்ம வியச் சக்ரா:
ப்ரத்யேக மக்ஷராருடா: !
த்வைதீயீகம் கூடம் கதிதம்
தத் காமராஜாக்யம் !! 10

சிவ - ஹ் ஹம்ஸ - ஸ், பிரஹ்ம - க் வியத் - ஹ், சக்ரா: - ல், பிரத்யேக மக்ஷர ஆருடா: ஆகிய ஒவ்வொன்றுடன் "அ" சேர்ந்து இரண்டாவதான காமராஜ கூடம் என்று பெயர்.

அக்ஷரங்கள் தொகுதிக்கு கூடம் என்று பெயர்.

## சக்தி கூடம்

சிவதோ வியதோ முக்தம் த்ருதீய
மீதமேவ சக்தி கூடாக்கியம்
ஹ்ருல்லேகாணாம் த்ரிதயம் கூடத்ரிதயேபி
யோஜ்ய மந்தே ஸ்யாத் !! 11

ஹஸகஹல என்று முன்பு கூறியதில் (சிவத:) சிவ பீஜமான "ஹ" (வியத:) ஆகாச பீஜமான "ஹ" ஆகிய இரண்டும் நீங்கலாக மீந்த "ஸகல" சக்தி கூடத்தில் இடம் பெறுகிறது.

மூன்று கூடங்களின் கடைசியிலும் "ஹ்ரீம்" சேர்க்கப்பட வேண்டும்.

## "ஹ்ரீம்" கார ஸ்வரூபம்

ஹ்ருல்லே காயா: ஸ்வரூபம் து
வ்யோமாக்னிர் - வாமலோசனா !
பிந்த் வர்த்த சந்திர ரோதின்யோ
நாத நாதாந்த சக்தயா: !! 12

வ்யாபிகா ஸமனோன்மன்ய
இதி த்வாதச ஸம்ஹதி: !
பிந்த்வாதீனாம் நவானாம் து
ஸமஷ்டிர் நாத உச்யதே !! 13

ஹ்ரீம் என்பது சிவசக்தி இணைந்த பதம். இதை சக்திப் பிரணவம் என்பர். இதனை மாயா பீஜம் என்றும் ஹ்ருல்லேகா பீஜம் என்றும் சொல்வர்.

இந்த ஹ்ரீம் பீஜத்திற்கு ஸ்வரூபம் ஆகாயம் (வ்யோம அதாவது ஹ், அக்னி அதாவது "ர்")

இந்த ஹ்ரீம் விளங்கும் இடம் நெற்றியிலிருந்து தலை வரையிலுள்ள ஒன்பது இடங்கள். இந்த ஒன்பதும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விரற்கடை அளவுக்கு ஒன்றின் மேல் ஒன்றாக உள்ளது. (விவரம் பிரதிபாவின் குண்டலினி சக்தியில் காணவும்) இவை

| | |
|---|---|
| பிந்து | (ஈ) |
| சந்திர கலை | (அர்த்த சந்திர) |
| ரோதினி | (ரோதினி) |
| நாதம் | (நாதா) |
| நாதாந்தம் | (நாதாந்த) |
| சக்தி | (சக்தய:) |
| வியாபிகை | (வியாபிகா) |
| ஸமனை | (ஸமனா) |
| உன்மனி | (உன்மன்ய:) |

இந்த ஒன்பதின் கூட்டம் நாதம் என்று பொதுவாகக் கூறப்படும். இந்த ஒன்பதும் வீணா நாதம் போல் சூக்ஷ்மமான காலங்களில் உச்சரிக்கப்படும் த்வனி விசேஷங்கள்.

---



# அக்ஷரங்கள் வர்ண கணக்கு 3

மந்திரங்களின் ரூபம், ஸ்தானம், உச்சரிப்பு முறை முதலியவைகளை ஸ்ரீ பாஸ்கரராயர் இனி விவரிக்கிறார். (மந்திரங்கள் பற்றி மேலும் விவரம் "பிரதிபா"வின் "மந்திரானாம் மாத்ருகா தேவி" (சிருங்கேரி சாரதா)வில் காணவும்.

ப்ரதமேஷ்டாதச வர்ணாத்வா
விம்சதி ரக்ஷராணி மத்த்யே ஸ்யு: !
ப்ரதமேன துல்ய - மந்த்யம்
ஸங்க்காதேனாஷ்ட - பஞ்சாசத் !! 14

முதல் கூடத்தில் 18 வர்ணங்கள்! மத்ய கூடத்தில் 2 வர்ணங்கள்; கடைசி கூடத்தில் 18 வர்ணங்கள்

எல்லாம் சேர்த்து 58

உயிர் எழுத்து ஒரு வர்ணம், மெய் எழுத்து ஒரு வர்ணம்
உயிர் மெய் எழுத்து இரண்டு வர்ணம். இதன் படி

க - 2, ஏ - 1, ஈ - 1, ல - 2, ஹ்ரீம் - 12 ஆக 18
ஹ - 2, ஸ - 2, க - 2, ல - 2, ஹ்ரீம் - 12 ஆக 22
ஸ - 2, க - 2, ல - 2, ஹ்ரீம் - 12 ஆக 18.

ஹ்ரீம்க்கு எப்படி 127

ஹ்ரீம் காரத்தின் ஸ்வருபம் நாதமாகவும் உள்ளது. பிந்து, அர்த்த சந்திர, ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமன, உன்மனி முதலிய 9-ம் அக்ஷரத்திற்கான 3-ம் ஆக ஹ்ரீமுக்கு 12.

மந்திரத்திலுள்ள 58 வர்ணங்களில் முதல் இரண்டு கூடங்களிலுள்ள ஹ்ரீம் என்பதில் பிந்து முதல் உன்மனிவரை உள்ள 18 வர்ணங்களை நீக்கி மீதியுள்ள 40 வர்ணங்கள்தான் ஜபத்தில் உபயோகிக்கலாம்.

## அக்ஷரங்களை உச்சரிக்கும் மாத்திரை காலம்

மாத்ரா த்விதயோச்சார்யா காமகலா ச த்ரிகோணா ச !
பிந்து ரஹித ஹ்ருல்லேகா மாத்ரா கால த்ரயோச்சார்யா: !!

* வர்ணம் என்றால் அக்ஷரங்கள்

காம கலை * யான "ஈ" திரிகோணா என்னும் "ஏ" - இவை இரண்டு இரண்டு மாத்திரை ** காலமாக உச்சரிக்க வேண்டியவை.

பிந்து நீங்கிய ஹ்ரீம்காரங்கள் மூன்று மாத்திரை காலமாக உச்சரிக்க வேண்டும்.

ஹ - அரை மாத்திரை; ர் - அரை மாத்திரை; ஈ - இரண்டு மாத்திரை; ஆக மூன்று மாத்திரை.

அன்யேஷாம் வர்ணானாம் மாத்ரா
காலோர்த்த மாத்ரயா ஸஹித: !
பிந்தோரர்த்தம் மாத்ரா பரே
பரே சாபி பூர்வ பூர்வார்த்தா: !! 16

அகராத்துடன் கூடின மற்ற க, ல, ஹ, ஸ, க, ஹ, ல, ஸ, க, ல என்ற பத்து வர்ணங்களுக்கும் ஒன்றரை மாத்திரை. பிந்துவிற்கு அரை மாத்திரை.

ஸம்ஹத்யைகலவோநோ மாத்ரா
காலோஸ்ய நாதஸ்ய !
ஏகாதச வாக்கூடே ஸார்த்தா
ஏகாதசோதிதா மத்த்யே !! 17

---

* காமகலை பற்றிய முழுவிவரம் "பிரதிபா"வின் "காமகலா கமலாம்பிகா"வில் பார்க்கவும்.

** மாத்திரை - "பலா" என்ற சொல்லைச் சொல்ல எவ்வளவு நேரம் ஆகும்? மூன்று முறை கண்ணிமைக்கும் நேரமோ மூன்று முறை கையை நொடிக்கும் நேரமோ ஆகும். இதை எப்படி அறிகிறோம். ஒவ்வொரு எழுத்தையும் உச்சரிப்பதற்கு தேவைப்படும் கால அளவை வரையறுத்துள்ளனர். இதற்கே மாத்திரை என்று பெயர்.

ஒரு முறை கண் இமைக்கும் நேரம் அல்லது ஒரு முறை கை நொடிக்கும் நேரம் ஒரு மாத்திரை. மிகச்சிறிய கால அளவு லவம் எனப்படும். (ஒரு குண்டூசியைக் கொண்டு ரோஜா இதழில் குத்தும் நேரம் ஒரு லவம்) 256 லவம் கொண்டது ஒரு மாத்திரை.

பிந்து - அரை மாத்திரை அல்லது 128 லவம்
சந்திர கலை 64 - லவம்; ரோதினி 32 லவம்;
நாதம் - 16 லவம்; நாதாந்தம் - 8 லவம்; சக்தி - 4 லவம்
வியாபிகை - 2 லவம்; ஸமனை - 1 லவம்
உன்மனிக்கு காலமில்லை.

ஸார்த்கா அஷ்டௌ சக்தா
வேகைகலவோநிதா மாத்ரா: !
ஸம்ஹூத் யைகத்ரிம்சன் மாத்ரா
மந்த்ரே லவத்ரய ந்யூனா: !! 18

வாக்பவ கூடத்தில் ஒரு லவம் குறைய பதினோறு மாத்திரைகள்
காமராஜ கூடத்தில் ஒரு லவம் குறைய பதினொன்றரை மாத்திரைகள்
சக்தி கூடத்தில் ஒரு லவம் குறைய எட்டரை மாத்திரைகள்

ஆக மூன்று கூடங்களிலும் சேர்ந்து மூன்று லவம் குறைய 31 மாத்திரைகள்.

வாக்பவம்:- க - ஒன்றரை; ஏ - இரண்டு; ஈ - இரண்டு; ல - ஒன்றரை; ஹ்ரீ - 3; நாதம் ஒரு லவம் குறைய 1. ஆக ஒரு லவம் குறைய 11 மாத்திரைகள்.

காமராஜ கூடம்:- ஹ - ஒன்றரை; ஸ - ஒன்றரை; ஸ - ஒன்றரை; க - ஒன்றரை; ஹ - ஒன்றரை; ல - ஒன்றரை; ஹ்ரீ - 3; நாதம் 1 லவம் குறைய 1 (ஆக லவம் குறைய பதினொன்றரை மாத்திரைகள்)

சக்தி கூடம்:- ஸ - ஒன்றரை; க - ஒன்றரை; ல - அரை; ஹ்ரீ - 3; நாதம் 1 லவம் குறைய 1. ஆக எட்டரை மாத்திரைகள்.

## அக்ஷரங்களின் உற்பத்தி ஸ்தானம்

கண்டே ச கண்டதாலுனி தாலுனி
தந்தேஷு மூர்த்த்னி நாஸாயாம் !
ஸ்ப்ருஷ்ட விவாராத் யாந்தர பாஹ்யைர்
யத்னைஸ் ததக்ஷரோத்பத்தி: !! 19

கழுத்திலும், கழுத்தும் தாடையும் சந்திக்கும் இடத்திலும், பற்களிலும், சிரசிலும், மூக்கிலும் உள்ளும் வெளியுமான பிரயத்தனங்களால் இம் மந்திரத்தின் அக்ஷரங்கள் உற்பத்தியாகின்றன.

58 வர்ணங்களுக்கு 58 ஸ்தானங்கள்.

கழுத்து க் - 3; அ - 10; ஹ் - 5; கழுத்தும் தாடையும் ஏ - 1; தாடை ஈ - 4; பல் ல் - 3; ஸ் - 2; தலை ர் - 3; மூக்கு பிந்து முதலிய நாதங்கள் 9 x 3 = 27; ஆக 58.

ப்ரளயாக்னி நிபம் ப்ரதமம்
மூலாதாரா தனாகதம் ஸ்ப்ருசதி !
தஸ்மா தாக்ஞாசக்ரம் த்விதீய
கூடம் து கோடி ஸூர்யாபம் !! 20

இங்கு மூலாதாரம் முதல் அனாகதம் வரை முதல் கூடமாகவும் அங்கிருந்து ஆக்ஞா சக்ரம் வரை இரண்டாவது கூடமாகவும் விளக்கப் படுகிறது.

தஸ்மால் லலாட மத்யம்
தார்த்தீயம் கோடி சந்த்ராபம்
மாலாவணிவத் வர்ணா:
க்ரமேண பாவ்யா உபர்யுபரி !! 21

ஆக்ஞை முதல் லலாட மத்யம் (நெற்றிநடு) வரை மூன்றாவது கூடம். இவைகளில் எழுத்துக்கள் ஒன்றன் மேல் ஒன்றாக இருப்பதாக தியானிக்கப்பட வேண்டும்.

ஆதாரோத்திதநாதோ குண இவ
பரிபாதி - வர்ண மத்யகத: !
மத்யே பாலம் பிந்துர் - தீப
இவாபாதி வர்த்துலாகார: !! 22

மூலாதாரத்தில் எழுந்த நாதம் மாலையில் சரடு போல் நெற்றி வரை வியாபித்து அங்கு தீபம் போல பிந்துவாகப் பிரகாசிக்கிறது.

## நவ நாதங்கள்

சப்த சிருஷ்டிக்கு நாதமே ஆதாரம். இந் நாதத்தின் அதி சூக்ஷ்ம வடிவமே அம்பிகையின் "பரா" ஸ்வரூபம். இச்சக்தியே உலகை சிருஷ்டிக்கக் கருதிய போது "பச்யந்தி" என்ற பெயரைப் பெற்றாள்.

இதனின்று அவிக்ருதம், சூன்யம், ஸ்பர்சம், நாதம், த்வனி, பிந்து, சக்தி, பீஜம், அக்ஷரம் என்ற நவ நாதங்கள் உண்டாயின. இவற்றின் சமஷ்டியே "மத்யமா". இந்த 9 நாதங்களும் ஆறு ஆதாரங்களிலும் நாதம் (ஆக்ஞைக்கு 4 விரற்கடைமேல்) நாதாந்தம் (அதற்கு ஒரு விரற்கடைமேல்) பிரும்மரந்திரம் (தலை உச்சி) எனும் ஸ்தானங்களுமாக ஒன்பது இடங்களில் விளங்கும். இதனால் "வைகரீ" என்ற வாக்கு உண்டாயிற்று.

ததுபரி கதோர்த்த சந்த்ரோன் வர்த்த:
காந்த்யா ததாக்ருத்யா !
அத ரோதினீ ததூர்த்வம்
த்ரிகோண ரூபா ச சந்திரிகா - காந்தி: !! 23

மந்திரங்களுக்கு யந்திர வடிவம் உள்ளவாறு அர்த்தசந்திரன், ரோதினி, நாதம், நாதாந்தம் முதலிய சூக்ஷ்ம நாதங்களுக்கும் வடிவம் உண்டு.

பிந்துவிற்கு மேல் பிரகாசத்திலும், வடிவத்திலும் அரைச் சந்திரனைப் பின் பற்றிய ஸ்வரூபம். இதற்கு மேல் முக்கோண வடிவமானதும் நிலவு போல பிரகாசிப்பதுமான ரோதினீ.

நாதஸ்து பத்ம ராகவ - தண்ட
த்வய மத்த்ய வர்த்தினீவ ஸிரா !
நாதாந்தஸ் தடிதாப: ஸவ்ய
ஸ்த்தித பிந்து யுக்த லாங்கலவத் !! 24

நாதம் பதம் ராகத்தைப் போல பிரகாச முடையது. இரண்டு அண்டங்களுக்கு நடுவில் உள்ள நரம்பு போல் உள்ளது. நாதாந்தம் மின்னலைப்போன்று பிரகாசிப்பது. இடது பக்கத்திலிருக்கும் பிந்துவுடன் கூடின கலப்பை போல் உள்ளது.

திர்யக்பிந்து த்விதயே வாமோத்
கச்சத் ஸிராக்ருதி: சக்தி: !
பிந்தூத்கச்சத் த்ர்யச்ராகாரதரா
வ்யாபிகா ப்ரோக்தா !! 25

குறுக்காக இணைந்த இரு பிந்துக்களில் இடது பிந்துவிற்கு மேல் செல்லும் நரம்பு போன்ற வடிவத்துடன் கூடியது சக்தி. பிந்துவிற்கு மேல் அமையும் முக்கோண வடிவினது வியாபிகா.

ஊர்த்த்வாதோ பிந்துத்வய
ஸம்யுத ரோகாக்ருதி: ஸமனா !
ஸைவோர்த்தவ பிந்து ஹிநோன்மனா
ததூர்த்த்வம் மஹா பிந்து: !! 26

மேலும் கீழும் இரண்டு பிந்துக்களுடன் கூடிய கோட்டில் வடிவமுடையது ஸமனை. இதுவே ஊர்த்வ பிந்து. மேல் பிந்து இல்லாவிட்டால் உன்மனி அதற்கு மேல் உள்ளது மகாபிந்து.

## அக்ஷர உச்சரிப்பு

சக்த்யாதீனாம் து வபுர் த்வாதச
ரவி காந்தி புஞ்ஜாபம் !
இத்யேவம் வர்ணானாம் ஸ்த்தானம்
ஜ்ஞாத்வோச்சரேத் யத்னாத் !! 27

சக்தி முதலியவற்றின் வடிவம் 12 சூரியர்களுடைய ஒளியைப் போன்றது. மானஸ ஜபத்தின் உச்சாரணை இல்லை எனினும் வர்ணங்களின் உற்பத்தி, ஸ்தானம், உச்சரிப்பு முதலியவைகளை சூக்ஷ்மமாகப் பாவிக்க வேண்டும்.

நாத: ப்ராதமிகஸ்து த்விதீய
கூடேன ஸாக முச்சார்ய: !
த்வைதீயீகம் நாதம் தார்த்தியே
நோச்சரேந் ந ப்ருதக் !! 28

நாதம் என்பது பிந்து முதல் உன்மனி வரையுள்ள ஒன்பது. ஒன்றாவது கூடத்தின் நாதம் இரண்டாவது கூடத்துடன் சேர்ந்தும் இரண்டாவது கூடத்தின் நாதம் மூன்றாவதுடனும் சேர்ந்து உச்சரிக்கப்படவேண்டும்.

பிந்த்வாதி நவகயோஸ்து ப்ராக்தன
கூடஸ்த்தயோ ரனயோ: !
ஸம்மேலனேன சபலம் தார்த்தீயீகம்
விபாவயேத் கூடம் !! 29

முதல் இரண்டு கூடம் சேர்த்தும் மூன்றாவது கூடம் பிரித்தும் பாவித்தல் வேண்டும்.

பிந்த்வாதிக ஸமனாந்தம் க்ரமேண
தார்த்தீய முச்சரேந் நாதம் !
உன்மன்யந்தர் லீனம் விபாவயே
தேத துச்சரணம் !! 30

பிந்து முதல் ஸமனை வரை தொடர்பாக மூன்றாவது கூடத்திலுள்ள நாதமானது உச்சரிக்கப் படவேண்டும். இந்த உச்சாரணம் உன்மனியில் லயமானதாக பாவனை செய்ய வேண்டும்.

ஆத்யே தச மத்த்யே தா: ஸார்த்தாஸ்
தார்த்தீய கூடேஷ்டௌ !
ஏக லவோனா ஊன த்ரிம்சன்
மாத்ரா மனோர் ஜபே கால: !! 31

முதல் கூடத்தில் 10 மாத்திரை; மத்ய கூடத்தில் பத்தரை மாத்திரை; மூன்றாவது கூடத்தில் 1 லவம் குறைய எட்டரை மாத்திரை. ஆக மந்திர ஜப காலம் ஒரு லவம் குறைய 29 மாத்திரை. மானஸ ஜபத்தில் கால நிபந்தனை இல்லை. கூடங்களை தனித் தனியாக உச்சரித்தால் மொத்தம் 31 மாத்திரை. ஜபத்தில் தொடர்ந்து உச்சரிப்பதால் 29 மாத்திரை.

## அக்ஷரங்களின் ஸ்வரூப விசேஷம்

விய்ஷ்டி சமஷ்டி விபேதா
தஸ்யாம் சத்வாரி பீஜானி !
ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார னாக்யா
ரூபாணி பாவனீயானீ : !! 32

ஒரு தென்னை மரம் - வியஷ்டி
பல தென்னை மரங்கள் கொண்ட தோப்பு - சமஷ்டி

மூன்று கூடங்களுக்கு தனித்தனியாக மூன்று பீஜங்கள். ஒன்று கூட்டி ஒரு பீஜம்; ஆக நான்கு பீஜங்கள் - இவற்றை சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் அனுக்கிரகம் என பாவிக்கவேண்டும்.

திருபுடி என்ற புடங்கள் தத்துவங்கள் பீடங்கள் அன்வயங்கள் லிங்கங்கள் மாத்ருகைகள் இவைகளின் சமஷ்டி ரூபங்களாக இந்த நான்கு பீஜங்களும் சிந்திக்கப்படவேண்டும்.

புட தாம தத்வ பீடான்வய லிங்கக
மாத்ரு தத் ஸமஷ்டீனாம் !
ரூபாந்தராணி பீஜான்யமூனி
சத்வாரி சிந்தனீயானி !! 33

| | வியஷ்டி | சமஷ்டி |
|---|---|---|
| புடங்கள் | ஞாத்ரு, ஞானம் ஞேயம், | மூன்றும் சேர்ந்த திரிபுடி |
| தாமங்கள்:- | | |
| 1. சக்ரங்கள் | அக்னி சக்ரம் ஸூரிய சக்ரம் சந்திர சக்ரம் | பிரும்ம சக்ரம் |
| 2. நாதர்கள் | மித்ரேசர் ஷஷ்டீசர் உட்டீசர் | சர்யானந்தர் |
| 3. தசைகள் | ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்தி | துரீயம் |
| 4. சக்திகள் | வாமா, ஜ்யேஷ்டா ரௌத்ரி | சாந்தா |
| 5. சக்திகள் | இச்சா, கிரியா, ஞானம் | அம்பிகை |
| 6. சக்திகள் | காமேஸ்வரி, வஜ்ரேஸ்வரி பகமாலினி | மகா திரிபுரசுந்தரி |
| 7. ஆத்மா | ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா | ஞானாத்மா |

| | | |
|---|---|---|
| தத்துவங்கள் | ஆத்ம தத்துவம்<br>வித்யா தத்துவம்<br>சிவ தத்வதுவம் | ஸர்வ தத்துவம் |
| பீடங்கள் | காமகிரி<br>பூர்ணகிரி<br>ஜாலாந்திரம் | ஒட்டியாண பீடம் |
| ஆம்னாயம் | பூர்வாம்னாயம்<br>தக்ஷிணாம்னாயம்<br>பச்சிமாம்னாயம் | உத்தராம்னாயம் |
| லிங்கங்கள் | சுயம்பு, பாண,<br>இதர லிங்கங்கள் | பரலிங்கம் |
| மாத்ருகை | பச்யந்தி, மத்யமா<br>வைகரீ | பரா |

## ஒவ்வொரு அக்ஷர ஸ்வரூப விளக்கம்

ஏகைகஸ்மின் கர்மணி ஸ்ருஷ்ட்யாதி
விபேததஸ் த்ரிவிதே !
ப்ரஹ்மாத்யா அதிபதயோ
பாரத்யாதி ஸ்வசக்திபி: ஸஹிதா: !! 34

ஒவ்வொரு கர்மாவிலும் மூன்று விதம்.

1. சிருஷ்டியில் சிருஷ்டி
2. சிருஷ்டியில் ஸ்திதி
3. சிருஷ்டியில் ஸம்ஹாரம்
4. ஸ்திதியில் சிருஷ்டி
5. ஸ்திதியில் ஸ்திதி
6. ஸ்திதியில் ஸம்ஹாரம்
7. ஸம்ஹாரத்தில் சிருஷ்டி
8. ஸம்ஹாரத்தில் ஸ்திதி
9. ஸம்ஹாரத்தில் ஸம்ஹாரம்

ப்ரஹ்மாதயஸ் த்ரயோமீ பாரத்யாத்
யாச்ச சக்தயஸ் திஸ்ர: !
ப்ரத்யக்ஷர ஸ்வரூபா: சாக்தார்த்தே
வக்ஷ்யமாணயா ரீத்யா !! 35

பிரும்மா, ருத்திரன், விஷ்ணு, மூவரும் சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி சக்திகள் மூவரும் தனித்தனி அக்ஷரத்தின் ஸ்வரூபம் உடையவர் ஆவர்.

முதல் கூடம்:- பிரும்மா, க; சரஸ்வதி - ஏ; விஷ்ணு - ஈ; லக்ஷ்மி - ல; ருத்ரன் - ஹ்; ருத்ரானி - ர்; சாந்தாம்பிகை - ஈ.

2 வது கூடம்:- பிரும்மா - ஹ; சரஸ்வதி - ஸ; விஷ்ணு - க; லக்ஷ்மி - ல; ருத்ரன் - ஹ்; ருத்ராணி - ர்; சாந்தாம்பிகை - ஈ.

இதில் ஒரு "ஹ" நீக்கி 3 வது கூடத்தில் சேர்க்கப்படுகிறது.

3 வது கூடம்:- பிரும்மா - ஹ; சரஸ்வதி - ஸ; விஷ்ணு - க; லக்ஷ்மி - ல; ருத்ரன் - ஹ்; ருத்ராணி - ர்; சாந்தாம்பிகை - ஈ.

## பிந்து முதலியவற்றின் ஸ்வரூபம்

ஹ்ருல்லேகா காமகலா ஸபரார்த்த
கலாக்ய குண்டலின்யுக்தா: !
நாதாச்சக்ர த்ரிதய திரிதயாத்மானோ
விபாவனீயா: ஸ்யு: !! 36

பிந்து "ஸபரார்த்த கலா" என்ற பெயரால் குறிப்பிடப்படுகிறது. ஸ - பரா என்றால் ஸ வுக்குப் பின் வரும் ஹ என்ற எழுத்து. இதன் வடிவம் விஸர்க்கம் அல்லது இரண்டு பிந்து. அர்த்தகலா என்றால் அதில் பாதி, அதாவது ஒரு பிந்து.

பிந்துகலை முதல் கூடத்தில் அக்னி குண்டலினி என்றும், 2வது கூடத்தில் சூரிய குண்டலினி என்றும், 3வது கூட.த்தில் சோம குண்டலினி என்றும் பெயர் பெறும்.

முதல் கூடம்:- (மூலாதாரம் முதல் அனாகதம் வரை) இதன் நாதமாகிய அக்னி குண்டலினி, அனாகதத்திற்கு மேல் ஆக்ஞை வரையில் அக்னி சிகை போல் வியாபித்து திரைலோக்ய மோஹனம், ஸர்வாசா பரிபூரகம், ஸர்வ ஸம்க்ஷோபணம் என்ற மூன்று. சிருஷ்டி சக்கரங்களுக்கு உயிர் ஸ்தானமாயிருக்கிறது.

2 வது கூடம்:- அனாகதம் முதல் ஆக்ஞை வரை வியாபிக்கும் நாதமாகிய சூரிய குண்டலினி ஆக்ஞைக்கு மேல் பிந்து ஸ்தானம் வரை வியாபித்து ஸர்வ ஸௌபாக்யதாயகம், ஸர்வார்த்த ஸாதகம், ஸர்வ ரக்ஷாகரம் என்ற மூன்று ஸ்திதி சக்கரங்களுக்கு உயிர் ஸ்தானமாக இருக்கிறது.

3 வது கூடம்:- ஆக்ஞை முதல் தலை உச்சி வரை வியாபிக்கும் சோம குண்டலினி பிந்து ஸ்தானம் முதல் துவாதசாந்தம் வரை வியாபித்து ஸர்வ ரோககரம், ஸர்வ ஸித்திப்ரதம், ஸர்வானந்தமயம் என்ற ஸம்ஹார சக்கரங்களுக்கு உயிர் ஸ்தானமாக இருக்கிறது.

## ஐந்து அவஸ்தைகள்

இந்த்ரியதசக வ்யவஹ்ருதிருபா
யா ஜாகராவஸ்த்தா !
தத்ர பிரகாசரூபோ ஹேதுர் பாவ்ய
ஸ்த்ருதீயகே ரேபே !! 37

பத்து இந்திரியங்களின் செயல் வடிவான நிலை; அது விழிப்பு நிலை (ஜாக்ரத்), அங்கு பிரகாச வடிவான காரணம் என்று மூன்றாவது கூடத்திலுள்ள ர காரத்தில் ஆக்ஞையில் பாவனை செய்யவேண்டும். (பத்து இந்திரியங்கள் - ஞானேந்திரியங்கள் 5; கர்மேந்திரியம் 5)

அந்தக்கரண சதுஷ்க வ்யவஹார:
ஸ்வாப்னிகாவஸ்ததா !
ஸா தார்த்தீயேகாராத் போத்த்யாபி
கலஸ்த்தலே சிந்த்யா !! 38

நான்கு வகைப்பட்ட அந்தக்கரணத்தின் விவகாரம் மட்டும் உள்ள நிலை கனவு நிலை. இது மூன்றாவது கூடத்திலுள்ள ஈ காரத்தில் உணரத்தக்கதாயினும் கழுத்து ஸ்தானத்தில் ல காரத்தில் சிந்திக்கப்பட வேண்டும். (அந்தக்கரணம் - மனம், புத்தி சித்தம், அகங்காரம்)

ஆந்தரவ்ருத்தோர் - லயதோ
லீனப்ராயஸ்ய ஜீவஸ்ய
வேதனமேவ ஸுஷுப்திச் சிந்த்யா
தார்த்தீய பிந்தௌ ஸா !! 39

உறக்கம் மூன்றாவது கூடத்திலுள்ள பிந்துவில் ஆக்ஞைக்கு ஒரு விரற்கடைக்கு மேல் பாவனை செய்யப்படவேண்டும்.

துர்யாவஸ்த்தா சிதபிவ்யஞ்ஜக
நாதஸ்ய வேதனம் ப்ரோக்தம் !
தத்பாவனார்த்த சந்த்ராதிகம் த்ரயம்
வ்யாப்ய கர்த்தவ்யா !! 40

ஞானத்தை வெளிப்படுத்தும் நாதத்தின் அறிவே துரீய நிலை. அர்த்தசந்திரன், ரோதினி, நாதம் இம்மூன்றும் பிந்துவிற்கு ஒரு விரற்கடைக்கு மேல் பாவிக்கப்படவேண்டும்.

ஆனந்தைக கனத்வம் யத் வாசாமபி
ந கோசரோ ந்ருணாம் !
துர்யாதீதாவஸ்த்தா ஸா
நாதாந்தாதி பஞ்சகே பாவ்யா !! 41

ஆனந்தம் ஒன்றே பரிபூர்ணமான நிலை. வாக்கிற்கு எட்டாதது துரீயாதீத நிலை. இதை நாதாந்தம், சக்தி, வியாபிகை உன்மனி, ஸமனை ஆகிய ஐந்து ஸ்தானங்களில் நெற்றியில் ஒன்றுக்கொன்று ஒரு விரற்கடைக்கு மேலாகப் பாவிக்க வேண்டும்.

உபநிஷத்துக்கள் ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகள் தான் என்கின்றன. தந்திரங்கள் இவைகளுடன் துரீயம், துரீயாதீதம் என்ற இரண்டு அவஸ்தைகளையும் திரோதானம், அனுக்ரகம் என்ற இரு கிரியைகளையும் சேர்த்துச் சொல்கின்றன.

ஸுஷுப்தியில் ஜீவன் பரப்பிரும்மத்தோடு முற்றிலும் கலந்து விடுகிறதில்லை. ஸுஷுப்தியில் ஜீவன் காரண சரீரத்துடன் வியவகாரம் செய்வது போல துரியாவஸ்தையில் ஜீவன் வியவகாரம் செய்யும் சரீரத்திற்கு மகா காரண சரீரம் என்று பெயர். இதற்கு மேல் துரீயாதீதத்தில் ஜீவன் எவ்வித உபாதியும் அவஸ்தையுமில்லாமல் பரப்பிரும்மத்துடன் ஐக்யமாகி விடுகிறான்.

---

## அன்னையின் பாதத்தில் அர்ச்சித்த குங்குமம்

இவ்வுலகில் மனிதப் பிறவியை அடைந்த நாம் எல்லோரும் நம் முற்பிறப்பில் செய்த புண்ய பாபத்தின் பயனாக சுக துக்கங்களை அனுபவிக்கிறோம்.

சிலர் சுகம் வரும்பொழுது சந்தோஷமாக இருக்கிறார்கள். துக்கம் வந்தால் பிரும்மா என் தலையில் இப்படி எழுதினாரே என்ற வருத்தப்பட்டு தெய்வத்தை நொந்துக் கொள்கிறார்கள்.

ஸ்ரீ மஹாபாரதத்தில்,

பெரும்பாலும் அக்ஞனாக உள்ள மனிதர்கள் துக்கம் வரும் பொழுது தன் முன்வினைப் பயன் என்று உணராமல் தெய்வத்தை நிந்திக்கிறார்கள் என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறுகின்றார்.

பிரும்ம தேவன் என்ன செய்வார்? பூர்வ ஜன்ம புண்ணிய பாபத்தின்படி அனுபவிக்க வேண்டியதைத்தான் எழுதுகிறார். ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கு மாற்றலாகும் ஆபீஸான் பர்ஸனல் பைல் அவருடன் செல்வது போல,

அப்படியென்றால் ஒரு மனிதன் தன் முன் ஜன்ம பாபத்தின் பயனை அடைந்துதான் ஆகவேண்டுமா? என்றால் கெட்ட பலனை அதாவது தலை எழுத்தை மாற்ற ஒரு வழி உண்டு என்று சாக்தம் கூறுகிறது. அதுதான் அன்னை ஸ்ரீ புவனேஸ்வரியின் பாதத்தில் அர்ச்சித்த குங்குமத்தை நெற்றியில் இட்டுக் கொள்வது.

# நிரூபணங்கள் 4



முதல் அம்சத்தில் இரு நிரூபணங்கள் பற்றி குறிப்பிடப் படுகின்றன. ஒன்று சூன்ய ஷட்க நிரூபணம்; மற்றொன்று சப்த விஷுவ நிரூபணம்.

சூன்யம்: - மனதில் எதுவுமே நினைக்கப் படாமல் இருப்பது சூன்யம். நிர்விகல்ப சைதன்யம் என்பது தான் இங்கு சூன்யம் எனப்படுகிறது.

நஷ்டே பூர்வ விகல்பே து யாவதன்யஸ்ய நோதய: !
நிர்விகல்பக சைதன்யம் ஸ்பஷ்டம் தாவத் விபாஸதே !!
- லகு வாக்ய விருத்தி (ஆதி சங்கரர்)

ஜாக்ரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி, துரீயம், துரீயாதீதம் எனும் ஐந்து அவஸ்தகளுக்கும் ஒவ்வொன்றின் முன்னும் பின்னுமாக ஆறு சூன்யங்கள் உண்டு. முதல் ஐந்தும் அவஸ்தைகளுக்குட்பட்டவை. துரீயாதீதத்திற்கு மேல் உன்மனி ஸ்தானத்தில் விளங்கும் மகா சூன்யத்தில் எந்த வகையான விருத்தியும் கிடையாது. துரீயத்தில் அறிவு வடிவ விருத்தியுண்டு. துரீயாதீதத்தில் பரிபூர்ண ஆனந்த கன அகண்டாகார விருத்தியுண்டு. மகா சூன்யம் அகண்டாகார விருத்தி ஒழிந்த சகஜ நிலை. ஐந்து சூன்யங்களும் கூடஸ்தனுடைய ஸ்வப்ர காசத்தினால் விளங்குகின்றன.

சூன்யஷட்க நிரூபணம்

தார்த்தீயீகே ரேபஸ்த்தானே
பிந்தௌ ச ரோதின்யாம் !
நாதாந்த வ்யாபிக யோச்சந்த்ரக
துல்யானி பஞ்ச சூன்யானி !! 42

மூன்றாவது கூடத்தில் ர காரத்திலும் பிந்துவிலும் ரோதினியிலும் நாதாந்தத்திலும் வியாபிகையிலும் மயில் தோகையின் கண்களுக்கு நிகரான ஐந்து சூன்யங்களை பாவிக்க வேண்டும். ஒவ்வொரு அவஸ்தையிலும் மனம் எதுவுமே நினைக்காத நிலையே இந்த சூன்ய நிலை.

மயில் இறகிலுள்ள விசித்தரமான மண்டல வடிவில் ஐந்து சூன்யங்களை தியானிப்பவனுக்கு பரமாகாச வடிவமான அடுத்த சூன்யம் விளங்கும். இதைக் குறிக்கும் சுலோகம்.

சிகி பக்ஷ சித்ரரூபைர் மண்டலை: சூன்ய பஞ்சகம்
த்யாயதோனுத்தரே சூன்யம் பரம் வ்யோம தனுர்பவேத் !!
- ஸ்வச்சந்த ஸங்க்ரஹம்

உன்மன்யாம் நீருபம் ஷஷ்டம் சிந்த்யாம மஹாசூன்யம் !!

உன்மனியில் மகா சூன்யம் சிந்திக்கப்படவேண்டும்.

## சப்த விஷுவ நிருபணம்

உத்தராயனத்தில் சித்திரை மாதம் இரவும் பகலும் சமமாக இருக்கும்போது மேஷ ராசியில் ஸூரியன் பிரவேசிப்பது சித்திரை விஷு எனப்படும்.

தக்ஷிணாயனத்தில் ஐப்பசி மாதம் இரவும் பகலும் சமமாக இருக்கும்போது துலா ராசியில் சூரியன் பிரவேசிப்பது "துலா விஷு" எனப்படும். ஸ்ஷுவத்தில் சம பரிமானமுள்ள இரண்டிற்கு மூன்றாவது வஸ்துவுடன் சம்பந்தம் ஏற்படுகிறது.

ப்ராணாத்ம மானஸானாம் ஸம்யோக:
ப்ராண விஷு வாக்ய: !! 43

பிராணன், மனம், ஆத்மா அல்லது புத்தி இவைகளின் சேர்க்கையே "பிராண விஷு"

ப்ராதமிககூட நாதே த்வனாஹதாத்
ப்ரஹ்மரந்தராந்தே !
வியஷ்டி ஸமஷ்டி விபேதாத்
பீஜ சதுஷ்கஸ்ய ச ஸ்வஸ்ய !! 44

ஐக்யேந நாதமயதா விபாவனம்
மந்த்ர விஷு வாக்யம் !!

முதல் கூடத்தின் இறுதியிலுள்ள நாதத்தில் அனாகதத்திலிருந்து பிரும்மரந்திரம் வரையில் வியாபித்துள்ள 2-வது, 3-வது கூடங்களின் வியஷ்டி ஸமஷ்டி என்ற வேற்றுமையால் நான்காயுள்ள பீஜங்களின் நாதத்தையும் ஒன்று படுத்திய நாதமாக பாவித்தல் "மந்திர விஷுவம்" எனப்படும். அதாவது முதல் கூட நாதத்தையும் மந்திரத்தின் 2-வது 3-வது கூட அக்ஷரங்களின் வியஷ்டி சமஷ்டி நாதத்தையும் தன் மூலாதாரத்திலிருந்து கிளம்பிய நாத்துடன் ஐக்யப்படுத்தலே "மந்திர விஷு" ஆகும்.

பிராண விஷுவம், மந்திர விஷுவம் தவிர மேலும் ஐந்து விஷுவங்கள் குறிப்பிடப்படுகின்றன. அவைகள் நாடி, பிரசாந்த, கால, தத்வ, சக்தி விஷுவங்களாகும்.

ஆதாரோத்தித நாதஸ்யோச்சாராத்
பரஹ்மரந்த்ராந்தம் ! 45
ஷட்சக்ரானாம் க்ரந்தீன் த்வாதச
பிந்தன் ஸுஷும்னயைவ பதா !!
நாடீ நாதார்ணானாம் ஸம்யோகோ
நாடிகா விஷுவம் !! 46

மூலாதாரத்திலிருந்து எழுந்த நாதம் பிரும்மரந்திரம் வரை செல்லும் இயல்பால் ஆறு சக்கிரங்களின் கீழும் மேலும் உள்ள 12 கிரந்திகளையும் பிளந்துக்கொண்டு செல்வதில் ஸுஷும்னா நாடியுடன் மூலாதாரத்தில் எழுந்த நாதத்திற்கும் மந்திர அக்ஷரங்களுக்கும் ஏற்படும் ஐக்யம் நாடி விஷுவம் எனப்படும்.

ரேபே காமகலார்ணே ஹார்த்த
கலாயாஞ்ச பிந்த்வாதௌ !
நாதாந்தவதி நாத: ஸூக்ஷ்மதரோ
ஜாயதே தத்ர !! 47
சக்தோர் மத்யே தல்லயசிந்தன
முதிதம் ப்ரசாந்த விஷுவாக்க்யம் !!

ர காரத்திலும் ஈ காரத்திலும் பிந்துவாகிய ம காரத்திலும் பிந்து முதல் நாதாந்தம் வரையிலுள்ள மூலாதாரத்திலிருந்து எழுந்த நாதம் மிக ஸுக்ஷ்மமாக விளங்குகிறது. சக்தியின் மத்தியில் அது லயமாவதாக பாவித்தல் பிரசாந்த விஷுவம் எனப்படுகிறது. மூலாதாரத்தில் எழுந்த நாதம், சக்தி, நாதாலயத்திற்கு ஏற்படும் சாந்தி ஆகிய மூன்றில் ஐக்கியம் பிரசாந்த விஷுவம்.

சக்த்யந்தர்கத நாதம் ஸமனாயாம்
பாவயேல்லீனம் !! 48
ஸமனாகதமுன்மன்யாம் ஏதே
தவே சக்தி காலேவிஷு வாக்யே !!

சக்திக்குள் ஒடுங்கிய நாதம் வியாபிகையைக் கடந்து ஸமனையில் லயமடைந்ததாகவும், ஸமனையில் ஒடுங்கியது உன்மனியில் லயமடைந்ததாகவும் பாவிக்கவேண்டும். இவ்விரண்டும் சக்தி விஷுவம், கால விஷுவம் எனப்படும்.

ஸ்ரீ வித்யா கூடாவயவேஷு
ககாராதிஷூன்மனாந்தேஷு !! 49
அகுலாதி கோன்மனாந்த பிரதேச
ஸம்ஸ்தேஷு ஸகலேஷு
அத்த்யுஷ்ட நிமேஷோத்பிர
ஸப்ததசாதிக சதத்ரயத்ருடிபி: !! 50

உச்சரிதே நாதே ஸதி தஸ்யாந்தே
தத்வ வேதனம் பவதி !
ததிதம் சைதன்யாபிவ்யக்தி
நிதானம் து தத்வ விஷுவ வாக்யம் !! 51

மூலாதாரத்திற்கு கீழ் உள்ள அகுல ஸகஸ்ராரம், ஷட்தள கமலம் என்னும் இரண்டு பத்மங்கள் எல்லாவற்றிற்கும் மேலுள்ள பத்மமும் அகுல பத்மங்கள். மற்றவை எல்லாம் குலபத்மங்கள்.

மூலாதாரத்திலிருந்து பொதுவாக உச்சாரணத்தின் ஆரம்பம் கூறப்பட்டாலும் விசேஷமாக அதன் ஆரம்பம் அதற்கும் அகுல சகஸ்ராரத்திலிருந்துதான்.

நாதம் மந்திரத்தின் எழுத்துக்களுடனும் ஸ்தானங்களுடனும் ஒன்று கூடி தத்துவமஸி என்னும் போதத்தை உண்டாக்கும் நிலை தத்வ விஷுவம்.

ஏவ மவஸ்த்தா சூன்ய விஷுவந்தி
சக்ராணி பஞ்ச ஷட் ஸப்த !
நவ ச மனோ ராத்தாம்ச்ச
ஸ்மரதோர்ணோச்சாரணம் து ஜப: !! 52

பஞ்ச அவஸ்தைகள், சூன்யங்கள் ஆறு, விஷுவங்கள் ஏழு, சக்ரங்கள் ஒன்பது இவைகளை உணர்ந்து மந்திரங்களின் அர்த்தங்களை தியானித்துக் கொண்டு அக்ஷரங்களை தியானித்தல் ஜபம்.

## சகளம் நிஷ்களம்

பிரும்மம் சகளம் நிஷ்களம் என்று இரண்டு விதமாகச் சொல்லப் படுகிறது. இதை,

த்வே பிரம்ஹணீ
வேதிதவ்யே பரம்சா பரம் ச - என்று கூறுகிறது.

இதில் நிஷ்களம் பரம்; சகளம் அபரம்.

சகளம் ஜகத்தை ஆட்டி வைக்கும் சக்தி கொண்டதாகவும் ஜகத் ரூபமாகவும் இருக்கிறது.

நிஷ்களம் ஒரே விதம் தான். இதை ஞானம் ஒன்றினால் மட்டுமே அடைய முடியும்.

சகள நிஷ்கள ரூபங்கள் பற்றி கூர்ம புராணத்தில் அம்பிகை தன் பிதாவான ஹிமவானுக்கு விஸ்தாரமாகச் சொல்லுவதாக சொல்லப் பட்டிருக்கிறது.

அசக்தோ யதிமாம் த்யாதும் ஐச்வரம் ரூபம் அவ்யயம்
தகாமே ஸகளே ரூபே காலாத்யேனந்த பேதினி !
யதேவ ரூபம் மேதாத மனஸோ கோசரஸ்தவ
தன்னிஷ்டஸ் தத்பரோ பூத்வா ததர்ச்சன பரோபவ !!

யத் து மே நிஷ்களம் ரூபம் சின்மாத்ரம் கேவலம் சிவம்
ஸர்வோபாதி விநிர்முக்தம் ஏகமேவாம்ருதம் பரம்
ஞானேனைகேன தல்லப்யம் க்லேசேன பரமம் பதம் !!

## சக்ர பாவனை

யோகினீ இருதயத்தில் இது சகளம், சகல நிஷ்களம், நிஷ்களம் என்று மூன்று விதமாகக் கூறப்படுகிறது.

சகளம்:- மூலாதாரத்திற்கு கீழுள்ள அகுல ஸஹஸ்ராரத்தில் த்ரைலோக்ய மோஹனம். மூலாதாரத்திற்கு கீழுள்ள ஷட்தள கமலத்தில் ஸர்வாசா பரிபூரகம்.

மூலாதாரத்தில் ஸர்வ ஸம்க்ஷோபணம் ஸ்வாதிஷ்டானத்தில் ஸர்வ ஸௌபாக்ய ஸாதகம், அனாகதத்தில் ஸர்வ ரக்ஷாகரம், விசுத்தியில் ஸர்வ ரோகஹரம், உள் நாக்கு நுனியில் ஸர்வ ஸித்திப்ரதம், ஆக்ஞையில் ஸர்வானந்தமயம் என்றிவ்வாறு பாவனை செய்யவேண்டும்.

சகள நிஷ்களம்:- நெற்றி நடுவில் பிந்துவிலிருந்து தொடங்கி அர்த்த சந்திரன், ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமனை, உன்மனி ஆகிய ஒன்பது ஸ்தானங்களில் 9 சக்கிரங்களைப் பாவிக்க வேண்டும்.

நிஷ்களம்:- உன்மனிக்கு மேலுள்ள மகா பிந்து ஸ்தானத்தில் ஒன்பது சக்கிரங்களையும் பாவித்தல் நிஷ்களம்.

ஜபம்:- மந்திரத்திலுள்ள 58 அக்ஷரங்களில் முதல் இரண்டு கூடங்களிலும் ஹ்ரீம் என்பதில் பிந்து முதல் உன்மனி வரையில் உள்ள 18 வர்ணங்களை நீக்கி மீதியுள்ள 40 வர்ணங்கள் மாத்திரம் ஜபத்தில் உச்சரிக்கப்படும்.

(முதல் இரண்டு கூடம் என்பது மூலாதாரம் முதல் அனாகதம் வரை, அனாகதம் முதல் ஆக்ஞை வரை. மூன்றாவது கூடத்தில் தானே பிந்து - உன்மனி யுள்ளது. ஆகவே அது மட்டும் சேர்க்கப்படுகிறது)

பாஸ்கர ராயேன குரோ: கருணாவசத: ஸமுன்மிஷிதே !
வரிவஸ்யாதி ரஹஸ்யே பூர்வாம்ச: பூர்ண தாமகமத் !! 53

பாஸ்கரராயர் இயற்றிய வரிவஸ்யா ரஹஸ்யம் என்ற நூலில் முதலம்சம் பூர்த்தியடைந்தது.



# ஸ்ரீ வித்யையே சுத்த வித்யை 5

ஸா பவதி சுத்த வித்யா யா
இதங் தாஹம் தயோர் அபேதம்

இதற்கு தத்தாத்ரேய ஸம்ஹிதை ஸ்ரீ வித்யையே "சுத்த வித்யை" என்கிறது. இதற்கு ஷோடசாக்ஷரீ மந்திரம் முளையாக இருக்கிறது. ஒரு முளைக்கு இரண்டு தளம். ஆகவே ஷோடசாக்ஷரீயின் 16 அக்ஷரங்களுக்கும் 32 தளம். இந்த 32-ம் அம்பிகையின் பற்களாக விளங்குகின்றது என்பதை "சுத்த வித்யாங்குராகார த்விஜபங்க்தி த்வயோஜ்வலா" என்ற லலிதா ஸஹஸ்ரநாமம் கூறுகிறது.

சுத்த வித்யை முதல் அனுத்தரா வரை 32 வித தீக்ஷைகள் தந்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த ஸ்ரீ வித்யை குரு குலத்தின் மூலமே பெறத்தக்கது என்பதைக் கடைசி 165-வது சுலோகத்தில் ஸ்பஸ்டமாகக் கூறுகிறார்.

ஸத்குரு குலத: க்ருபயா லப்தா
காமானியம் ஸஙிதே !
நிஜபுத்தி மாத்ர ஜன்யா பாபம்
கன்யா யதாஸ் வீயா : !! 165

ஸத்குரு குலத்தின் கிருபையால் அடையப்பட வேண்டிய வித்யை இது. சொந்த புத்தியில் தோன்றிய வித்யை பாபத்தைக் உண்டாக்கும். (தன்னிஷ்டப்படி மணந்த பெண் எப்படியோ அப்படி)

அகதாஸனம் ஹளக்ஷாந்தரம்
ஸமர்ஸாத்ய மாமகம் ஞானம் !
மாமக மே வானந்தம் மஹ்யம்
தததோ ஜயந்தி குரு சரணா: !! 166

அ க த என்னும் அக்ஷர வர்க்கங்களைப் பக்கங்களாகவும் ஹ ள க்ஷ என்ற அக்ஷரங்களை மூலைகளாகவும் கொண்ட முக்கோணத்தை இருப்பிடமாகக் கொண்ட குருநாதருடைய திருவடிகள் ஆத்ம ஞானத்தையும் ஆத்மானந்தத்தையும் அளிப்பனவாக வெற்றியுடன் விளங்குகின்றன.

ஸஹஸ்ராரத்தின் நடுவில் ஒரு முக்கோணம் உண்டு. அதன் மூன்று பக்கங்களில் 1. அ முதல் 16 அக்ஷரங்கள்
2. க முதல் 16 அக்ஷரங்கள்
3. த முதல் 16 அக்ஷரங்கள்

மூன்று மூலைகளில் ஹ ள க்ஷ என்ற அக்ஷரங்களில் தியானம் செய்யப் படுகின்றன. இதன் மத்தியில் குருவின் திருவடிகள் விளங்குகின்றன.

வித்யா வர்ணேயத் தோத்தார:
காலஸ் ததுச்சார: ।
உற்பத்தி ஸ்த்தானம் தத்யத்னோ
ரூபம் ஸ்த்திதிஸ்த்தானம் ॥ 159

வித்யையின் அக்ஷரங்கள் இத்தனை என்பது அவைகளை உச்சரிக்கும் விதம், காலம், உற்பத்தி ஸ்தானம் வடிவம் வியஷ்டி, சமஷ்டிரூபம், நன்றாய் பாவனை செய்யவேண்டிய அவஸ்த்தா பஞ்சமம், காயத்ரீ முதலிய அர்த்தம் இவை ஸ்ரீ வித்யைக்கு அந்தரங்கமானவை.

ஆகார: ஸ்வம் ரூபம் விபாவ்ய
மர்த்தோந்தரங்காணி ।
ருஷயச்சந்தோ தைவத
விநியோகா பீஜ சக்தி கீலானி ॥ 160

நியாஸம், தியானம், பூஜை முதலியவை எல்லோருக்கும் தெரிந்தவை. ஆகவே இங்கு கூறப்படவில்லை என்பது அடுத்த சுலோகத்தில் கூறப்படுகிறது.

நியாஸா தியானம் நியமா:
பூஜாதீனி து பஹிரங்கானி ।
பாஹ்யாங்கானி புன: ப்ரயோ
லோகே ப்ரஸித்த கல்பானி ॥ 161

## அர்த்த ஞானத்தின் அவசியம்

நார்த்தஜ்ஞான விஹீனம்
சப்தஸ்யோச்சாரணம் பலதி ।
பஸ்மனி வஹ்னி விஹினே
ந ப்ரக்ஷிப்தம் ஹவிர் ஜ்வலதி ॥ 54

சப்தத்தை அர்த்தம் தெரிந்து உச்சரிக்க வேண்டும். அர்த்த ஞானமில்லாமல் சப்தத்தை உச்சரித்தால் பலனளிக்காது. நெருப்பில்லாத சாம்பலில் போடப்பட்ட ஹவிஸ் ஜ்வலிக்காது.

சாந்தோக்ய உபநிஷத் "யதேவ வித்யயா கரோதி ச்ரத்தயோ ய நிஷதா ததேவ வீர்யவத்தரம் பவதி !!" என்கிறது. தத்துவ ஞானத்துடனும் சிரத்தையுடனும் யோக முறைப்படியும் எது செய்யப்படுகிறதோ அதுவே வீரியமுடையதாகும்.

அர்த்த மஜானானாம் நானாவித
சப்த மாத்ர பாடவதாம் !
உபமேயச்சக்ரீவான் மலயஜ
பாரஸ்யவோடைவ !! 55

அர்த்தம் அறியாமல் பல வகை சப்தங்களை மட்டும் படிப்பவர்கள் கழுதைக்கு ஒப்பிடப்படுகிறார்கள். சந்தனக் கட்டை பாரத்தை (அதன் வாசனை அருமை தெரியாமல் அது சுமப்பது போலத்தான்)

புருஷார்த்தானிச்சத்பி: புருஷை
ரர்த்தா: பரிஜஞேயா: !
அர்த்தனாதரபாஜாம் நைவார்த்த
ப்ரத்யுதானர்த்த: !! 56

அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய புருஷார்த்தங்களை விரும்புபவர்கள் அர்த்தம் தெரிந்து எதையும் செய்ய வேண்டும். அர்த்தத்தை ஆதரிக்காதவர்களுக்கு புருஷார்த்தம் இல்லவே இல்லை. அனர்த்தமும் உண்டாகும்.

அநாத: பூர்ண காயத்ர்யா:
பிரதிபாத்யோர்த்த ஆதிம:
பாவார்த்த: ஸம்ப்பிராயார்த்தோ
நிகர்ப்பார்த்தஸ் - துரீயக: !! 57

ஆகவே பூரண காயத்ரீயான அர்த்தம், ஸம்பிரதாய அர்த்தம் பர்வார்த்தம், நிகர்ப்பார்த்தம் முதலியவைகள் விளக்கப்படுகிறது.

கௌலி கார்த்தோ ரகஸ்யார்த்தோ
மஹாதத்வார்த்த ஏவ ச
நாமார்த்த: சப்த ரூபார்த்தச்
சார்த்தோ நாமைக தேசக: !! 58

சாக்தார்த்தம் ஸாமரஸ் யார்த்த
ஸமஸ்த ஸகுணார்த்கௌ
மஹாவாக்யார்த்த இத்யர்த்தா:
பஞ்சதச்யா: ஸ்வ ஸம்மிதா: !! 59

# ஸ்ரீ வித்யா பற்றி
# தெரிந்துக் கொள்ள வேண்டியவைகள்

15 அர்த்தங்கள்

1. காயத்ரி அர்த்தம்
   ஸ்ரீ வித்யை காயத்ரி தொடர்பு
2. பாவார்த்தம்
   மூன்று கூட தம்பதிகள்
3. ஸம்பிரதாயர்த்தம்:- பஞ்சபூதங்களிலுள்ள குணங்கள்
   15 அக்ஷரங்களின் வடிவாம்
4. நிகர்ப்பார்த்தம்:- இறைவன், குரு, சாதகன் ஒருவரே.
5. கௌளிகார்த்தம்:- பரதேவதை, மந்திரம், சக்கிரம், குரு
   ஆத்மா ஐக்கியம்
6. ரஹஸ்யார்த்தம்:- அக்னி, சூரிய, சந்திர கலைகள்
   குண்டலினி விஷயம்
7. மஹா தத்வார்த்தம்
8. நாமார்த்தம்:- அக்ஷரங்களுக்கு பொருள் வடிவாய்
   உள்ளவள் அம்பிகை
9. சப்த ரூபார்த்தம்:- அக்ஷர வடிவினளாக உள்ளவள் அம்பிகை
10. வாச்யார்த்தம் நாமப்பகுதிகளின் அர்த்தம்
11. சாக்தார்த்தம்:- பிரும்மாதி தம்பதிகள் எல்லோருமே
    காமகலை வடிவினர்கள்
12. சமரஸ அர்த்தம்:- சிவசக்தி சமரஸம்
13. ஸமஸ்தார்த்த அர்த்தம்:- எல்லா புருஷார்த்தங்களின் சாதனம்
    ஸாமரமான பொருளைக் கூறுவது
14. ஸகுணார்த்தம்:- குணத் தொகுதிகள் கூறப்படுவது
15. மகா வாக்யார்த்தம்:- "நானே பிரும்மம்" விளக்கம்

## 1. காயத்ரி அர்த்த நிருபணம்

ஸ்ரீ வித்யையில் காயத்ரியின் பொருள் அடங்கியுள்ளது என்பது பற்றி முற் பகுதியில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. ஆகவே சுலோகமும் அதன் அர்த்தமும் மட்டுமே கொடுக்கப்படுகிறது.

---

காயத்ரீ பற்றிய முழு விவரம் பிரதிபாவின் "தேவி காய்த்ரீ"யில் காணவும்.

காமயதே ஸ ககார: காமோ
ப்ரஹ்மைவ தத் பதஸ்யார்த்த: !!
ஸவிதுர் - வரேண்ய மிதி வை ஸவிது:
ச்ரேஷ்ட்டம் த்விதீய வர்ணாத்த: !! 60

உபநிஷத்தில் எந்த பிரும்மம் சொல்லப்பட்டதோ அதுவே "க"காரம். காமேஸ்வரன் என்ற பிரும்மமே காயத்ரீயில் உள்ள "தத்"என்பதின் அர்த்தம்.

ஸவிதுர் வரேண்யம் என்ற பதங்களுக்கு சிரேஷ்டமான பிரபஞ்ச காரணம் என்பது பொருள்.

ஸர்வாந்தர்யாமி ததத் பர்க்கோ
தேவஸ்ய தீதி துர்யார்த்த: !
ப்ருத்வி மஹீ லகாரஸ் த்ருதீய
துர்யாங்க்ரி - போதிகா மாயா !! 61

பர்கோ தேவஸ்யதீ என்பதற்கு அனைத்துள்ளும் உறைவதாயும் அனைத்தையும் தாங்குவதாகவும் உள்ளது எனப் பொருள். மாத்ருகைகளில் நான்காவதான "ஈ"யின் அர்த்தமும் இதுவே.

மஹீ யிலுள்ள சப்தம் ப்ருத்வீ சப்தத்தைக் குறிக்கும். "ல" காயத்ரீயின் மூன்றாவது நான்காவது பாதங்களைப் போதிப்பது "ஹ்ரீம்" என்பது.

முக்குணங்களுக்கு அப்பால் புத்தி குகையில் விளங்குவது பரம்பொருள். அதுவே "ஹ்ரீம்" என்பதன் அர்த்தமும் காயத்ரீயின் மூன்றாவது நான்காவது பாதங்களின் அர்த்தமும்,

"ஹ்ருதயாகார வாஸினி ஹ்ருல்லேகா" என்பது ச்ருதி.

த்ரிபதீ த்ரிவர்ண போத்த்யா துர்யஸ்
ததுபரி ஷடக்ஷரீகமக: !
அத தாத்த்யே வர்ணத்விதயம்
த்ரிபதீ ஷடக்ஷரீ கமகம்: !! 62

தத், ஸ்விது. வரேண்யம் என்ற மூன்று பதங்களும் இரண்டாவது கூடத்திலுள்ள ஹ ஸ க என்னும் அர்த்தங்களைக் கொண்டது நான்காவது எழுத்தாகிய "ஹ" பர்க்கோ தேவஸ்ய தீ என்பதன் பொருளுடையதாகும்.

மூன்றாவது கூடத்திலுள்ள ஸ, க என்ற இரண்டெழுத்துக்கள் தத்ஸவிதுர் வரேண்யம் பர்க்கோ தேவஸ்யதீ எனும் மூன்று பதத்தொடுதிகளின் பொருளுடையதாகும்.

| | | |
|---|---|---|
| க | - | தத் |
| ஏ | - | ஸவிதுர் வரேண்யம் |
| ஈ | - | பர்க்கோ தேவஸ்யதீ |
| ல | - | மஹீ |
| ஹ்ரீம் | - | தியோயோந: பிரசோதயாத் |
| ஹ | - | தத் |
| ஸ | - | ஸவிது |
| க | - | வரேண்யம் |
| ஹ | - | பர்க்கோ தேவஸ்ய தீ |
| ல | - | மஹீ |
| ஹ்ரீம் | - | தியோயோந: பிரசோதயாத் |
| ஸ | - | தத் ஸவிதுர் வரேண்யம் |
| க | - | பர்க்கோ தேவஸ்ய தீ |
| ல | - | மஹீ |
| ஹ்ரீம் | - | தியோயோ ந: பிரசோதயாத் |

கூடத்விதியே சேஷம் பூர்வவ-
துந்நேயமிதி து வித்யாயா:
காயத்ர்யர்த்தஸ் திரிபுரோபநிஷதி
கதிதஸ் ததைவ பாகவதே !! 63

இவ்வாறாக ஸ்ரீ வித்யைக்கு காயத்ரீ அர்த்தம் திரிபுரோப நிஷத்தில் * கூறப்பட்டுள்ளது.

இந்த உபநிஷத்தில் குறிக்கப்பட்டது திரிபுரதாபினீ உபநிஷத்தின் வாக்கியங்களே.

தத் ஸவிதுர் வரேண்யமிதி
ஸகாராக்ஷர: ஸமன்வித:
பர்க்கோ தேவஸ்ய தீத்யனேன
ககாரோபி ஸமன்விதோ பவதி !!

மஹீத்யனேன லகார: ஸமன்வித:
இதிஜ்ஞேய: சேஷம் - தியோயோந:
ப்சோதயாத் பரோ ரஜஸே ஸாவதோம்
கதிகாம்யம் ரமணீயம் ஹ்ருல்லேகாபி ஸமன்விதா ஸ்யாத் !
ஏவம் சக்திகூடமபிஸ்பஷ்டீக்ருதம் - திரிபுரதாபினி உபநிஷத்

---

* திரிபுரோபநிஷத் அர்த்தத்துடன் "பிரதிபா"வின் "திரிபுரா ரகசிய"த்தில் காணவும்.

## 2. பாவார்த்த நிருபணம்

3 கூடங்களிலுள்ள தெய்வ தம்பதிகள் பற்றிய விஷயம் இது.

வாமேச்சே ப்ரஹ்ம பாரத்யௌ
ஜ்யேஷ்ட்டா ஜ்ஞானே ஹரிக்ஷிதீ !
ரௌத்ரீக்ரியே சிவாபர்ணே
இத்யேதன் மிதுனத்ரயம் !! 64

வாமா சக்தியும் இச்சா சக்தியும் பிரும்மா என்ற புருஷ ரூபமாகவும் பாரதீ என்ற ஸ்திரீ ரூபமாகவும் இருப்பவர்கள்.

ஜ்யேஷ்டா சக்தியும் ஞான சக்தியும் விஷ்ணு என்ற புருஷ ரூபமாகவும் பூமி என்ற ஸ்திரி ரூபமாகவும் இருப்பவர்கள்.

ரௌத்ரீ சக்தியும் கிரியா சக்தியும் சிவன் பார்வதி ரூபமாக இருப்பவர்கள். இது (மிதுனத்ரயம்) 3 தம்பதிகளின் வடிவங்கள்.

த்ரிபி: கூடை: க்ரமாத்வாச்ய
மீதாரத்ரிதயேன து !
ஏதத் த்ரய ஸமஷ்ட்யாத்ம
வாச்யம் சாந்தாம்பிகாத் மகம் !! 65

மூன்று ஈகாரங்கள் மூன்று தம்பதிகளின் சமஷ்டி வடிவமாகும். அதுவே சாந்தாம்பிகை.

இந்த பாவார்த்தத்தில் ஈகாரம் நீங்கலாக ஒவ்வொரு கூடத்திற்கு ஒவ்வொரு தம்பதியும் ஈ காரத்திற்கு துரீய மிதுனமாகிய சாந்த - அம்பிகையும் பொருள்.

(சிவ சக்தி ஐக்கியமே சாந்தாம்பிகை)

யோகினிகள் - சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி
வீரேந்திரர்கள் - பிரும்மா, விஷ்ணு, ருத்திரன்
உபாஸகர்கள் - பிரளய கலர், விஞ்ஞான கலர், சகலர்
இவர்களது ஸம்யோகம் மந்திர வடிவம்.

இதை விளக்கும் யோகினி ஹிருதய சுலோகம்

அக்ஷரார்த்தோ ஹி பாவார்த்த: கேவல: பரமேச்வரி !
யோகிநிபிஸ்ததா வீரைர் வீரேந்த்ரை: ஸர்வதாப்ரியே !
சிவசக்தி ஸமாயோகாஜ் ஜனிதோ மந்த்ர ராஜ: !!

மாயா பீஜத்திற்கு (ஹ்ரீம்) நான்காவதான மிதுனம் (சிவசக்தி ஐக்ய சாந்தாம்பிகை) ஒப்புக் கொள்ளப்பட்டதாகும்.

யத்வா கீ: ஸகலப்பிரஹ்ம -
ப்ரப்ருதீனாம் த்ரயம் த்ரயம்
த்ரிகூடவாச்யம் மாயாயாஸ்
துரீயம் மிதுனம் மதம் !! 66

சகலர், பிரளய கலர் விக்ஞான கலர் - இவர்கள் உபாஸகத்திரயம்.

வாமேச்சாத்யா: ஷடீகார
இதி ஸப்தபி ரக்ஷரை: !
த்ரிராவ்ருத் தைரியம் வித்யா
ஸஞ்ஜாதா தேந தன்மயீ !! 67

வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரி, இச்சா, கிரியா, ஞான, இவை ஆறும் ஈகாரமும் என ஏழு அக்ஷரங்களால் மூன்று ஆவிருத்திகளால் ஸ்ரீ வித்யை உண்டானது. அதனால் அவ் வடிவமானது.

ஏழு அக்ஷரங்களின் மூன்று ஆவிருத்தி.

1. க ஏ ஈ ல ஹ்ர ர் ஈ
2. ஹ ஸ க ல ஹ்ர ர் ஈ
3. ஸ ஹ க ல ஹ்ர ர் ஈ

இரண்டாவது கூடத்திலுள்ள இரண்டு "ஹ" வில் ஒன்று மூன்றாவது கூடத்தில் சேர்க்கப்படுகிறது.

மந்திரம் இப்படி சமஷ்டி வடிவுடன் நான்கு தேவதா ஸ்வரூபமாகிறது.

வாமாதி சப்த சக்தினாம்
ஸமஷ்டி: பரதேவதா !
ஷட்த்ரிம்சத் தத்வ ரூபாஸ்மான்
மாத்ரயாபி ந பித்யதே !! 68

இந்த ஏழு சக்திகளின் தொகுதி 36 தத்துவங்களின் வடிவான பர தேவதையாகும். இப்படி இவர்களில் பேதமில்லை என்பதை அறிவதே பாவார்த்தம். இதை விளக்கும் யோகினி ஹிருதய சுலோகம் -

தேஷாம் சமஷ்டி ரூபேண பராசக்திம் து மாத்ருகாம்
கூடத்ரயாத்மிகாம் தேவீம் ஸமஷ்டி வியஷ்டி ஸ்வரூபிணீம்
ஆத்யாம் சக்திம் பாவயந்தோ பாவார்த்த இதி மன்வதே !!

அஹ காரௌ சிவசக்தி தூக்யாகாரௌ
பரஸ்பராச்லிஷ்டௌ !
ஸ்ப்புரண ப்ரகாசரூபாவுபநிஷ
துக்தம் பரம் ப்ரஹ்ம !! 69

அ கார ஹ கார வடிவினர் சிவமும், சக்தியும் பிந்து வடிவினர். விமர்ச வடிவாகவும். பிரகாச வடிவாகவும் உள்ளவர்கள். உபநிஷத்து களில் கூறப்பட்ட பரப்பிரும்மம் இவர்களின் ஐக்ய ரூபமேயாகும்.

விச்வஸிஸ்ருக்ஷாவசத: ஸ்வார்த்தாம்
சக்திம் விலோகயத் ப்ரஹ்ம !
பிந்தூ - பவதி தமிந்தும் ப்ரவிசதி
சக்திஸ்து ரக்த - பிந்துதயா !! 70

உலகை சிருஷ்டி செய்யும் விருப்பத்துடன் பிரும்மம் தன் பாதி வடிவான சக்தியைப் பார்த்ததும் பிந்து வடிவமாகிறது. சக்தி ரக்த பிந்து வடிவில் சந்திரனைப் போல வெண்மையான சிவ பிந்துவில் பிரவேசிக்கிறது.

(சிவபிந்து வெண்மையாதலால் சந்திர வடிவினதாகக் கூறப்பட்டது இதனால் "பிந்து" என்ற சொல்லின் "ப" காரம் நீங்கி "இந்து" என ஆயிற்று)

ஏதத் பிண்டத் வித்யம் விஸர்க்க
ஸமஜ்ஞும் ஹகார சைதன்யம்
மிச்ரஸ்து தத் சமஷ்டி: காமாக்யோ
ரவி ரகார சைதன்யம் !! 71

இந்த ரக்தம் சுக்லம் என்ற இரு பிந்துக்களும் விஸர்க்கம் என்ற சொல்லலால் குறிக்கப்படுபவை. "ஹ" காரத்திற்கு சைதன்யமாக இருப்பவை.

மிச்ர பிந்து இவற்றின் தொகுதி. காமன் எனப்படுவது சூரிய ஸ்வரூபம். "அ" காரத்தின் சைதன்யம்.

ஏஷாஹம் பத துர்யஸ்வர
காம கலா தி சப்த நிர்த் தேச்யா
வாகர்த்த ஸ்ருஷ்டி பீஜம்
தேணாஹந்தாமயம் விச்வம் !! 72

அஹம் என்னும் பதத்தினாலும், ஈ காரத்தினாலும் காமகலை என குறிப்பிடப்படும். இந்த பிரும்மம் சொல்லாகவும் பொருளாகவும் சிருஷ்டிக்கு வித்தாகும். இவ்வுலகம் அஹம் என்பதின் ஸ்வரூபமாகும்.

அந்த்ய ப்ரதமே மத்ய சதுர்த்தே
மந்த்ரேபி தௌ வ்யக்தௌ !
தேணாம்பா மனு ஜகதா ம பேத
ஏவாத்ர பாவார்த்த: !! 73

கடைசி கூடத்தின் முதல் எழுத்தாகிய ஸ, விலுள்ள அகாரத்திலும், மத்தியகூட நான்காவது எழுத்தாகிய ஹகாரத்திலும் சிவனும் சக்தியும் இரு தத்துவங்களும் வெளிப்படை இதனால் தேவிக்கும், மந்திரத்திற்கும் உலகிற்கும் பேதமின்மையே இங்கு பாவார்த்தம் எனப்படுகிறது.

## ஸம்ப்ரதாயார்த்த நிருபணம்

பஞ்ச பூதங்களிலுள்ள குணங்கள் 15 அக்ஷரங்களின் வடிவு என்பது ஸ்தாபிக்கப்படுகிறது.

வ்யோமாதி ஜனக ஹகர ஸ லார்ணைர்
க்கடனேன பஞ்ச பூத மயி
பஞ்ச சதுஸ்த்ரி த்வ்யே கக சப்தாதி
குணாத்ம பஞ்சதச வர்ணா !! 74

ஆகாயம் முதலியவற்றை பிறப்பிக்கும் ஹ க ர ஸ ல என்ற எழுத்துகளுடன் கூடியிருப்பதால் பஞ்சதசீ பஞ்ச பூதங்களின் ஸ்வருபமாகும். 5, 4, 3, 2, 1 ஆகிய சப்த ஸ்பர்சாதி குணங்கள் 15-ம் இம்மந்திரத்திலுள்ள 15 எழுத்துகளின் வடிவே

ஹ - ஆகாயம், குணம் சப்தம் ஒன்றே.
க - வாயு, குணம் சப்தம் ஸ்பர்சம் என 2.
ர - அக்னி, குணம் சப்தம் ஸ்பர்சம் ரூபம் என 3.
ஸ - ஜலம், குணம் சப்தம் ஸ்பர்சம் ரூபம், ரஸம் என 4.
ல - பிருத்வி, குணம் சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் என 5.

தத்தத் ஜனகைர் வர்ணைஸ் தத்தத்
ஸங்க்யை ஸ்து தத்குணாஜ்ஞாதா: !
காமகலாபிச் சதஸ்ரூபி ராஸீத்து
ஸ்பர்ச்ச சதுர் விதோநகை: !! 75

ஈ என்னும் காமகலை யாகிய நான்கினால் ஸ்பர்ச குணம் நான்கு வகையாக ஆயிற்று. பிருத்வி அப்பு தேயு வாயு ஆகிய நான்கில் இந்த நான்கை பிறப்பிக்க 4 "க" காரங்கள் இல்லையே என்றால் அவை ஈ காரங்களினின்று பிறந்தவை. "க" காரங்களால் அன்று.

பிருத்வி அப்பு தேயு வாயு ஆகாயம் ஆகிய ஐந்திலும் சப்த குணம் இருப்பதால் சப்த குணம் ஐந்து வகைப்படும். இவ்வைந்தும் மந்திரத்திலுள்ள ஐந்து "ஹ" காரங்களில் பிறந்தவை.

வாயு மண்டலத்திற்கு பிந்துருபம் அடையாளம். வாயுவிலுள்ள ஸ்பர்சம் ஸ்தூலம். அக்னி ஜல பூமிகளில் ஸூக்ஷ்மம்.

ரூப குணம் - ஹ்ரீம் காரத்திலுள்ள மூன்று "ர" காரங்களினின்று பிறந்தவை மூன்று வகைப்பட்ட ரூப குணம்.

ரஸ குணம் - இரண்டு "ஸ" காரங்களினின்று பிறந்தவை. இரு வகைப்பட்ட ரஸ குணம்.

கந்த குணம் - "ல" காரத்தினின்று பிறந்தது.

புவனத்ரய ஸம்பந்த்தா - தாஸீத்
த்ரேதா லகாரோபி
யே யே யத்யஜ்ஜனகாஸ் - தேஷாம்
தேஷாம் த ஏவார்த்தா: !! 76

மூவுலகங்களுடன் சம்பந்தத்தால் லகாரமும் மூன்றாக ஆயிற்று எந்தெந்த எழுத்துக்கள் எது எதை பிறப்பிக்கின்றனவோ அதற்கு அவையே அர்த்தங்களாம்.

ககாராத்ய வாச்யாஸ்து
ஸகலா: ப்ரலயாகலா: !
விக்ஞான கேவலாச்சேதி
த்ரிப்ரகாரா உபாஸகா: !! 77

மூன்று க காரங்களால் கூறப்படுவது ஸகலர், ப்ரலயகலர், விக்ஞானகலர் என்ற மூன்று வகைப்பட்ட உபாஸகர்கள்.

அகாரைர் தசஸங்க்யாகை
ருச்யந்தே ஜீவராசய !
வித்யாயா: ப்ராணபூத: ஸம்ஸ்தத்
வாக்யேகாதச: ஸ்வர: !! 78

பத்து என்று கணக்கிடப்படும் அ காரங்களால் ஜீவராசிகள் கூறப்படுகின்றன. வித்யைக்கு உயிராக இருந்துக்கொண்டு பதினோராவது உயிர் எழுத்தாகிய "ஏ" உலகிற்கு உயிராக இருக்கும் "தத்" என்ற பரம்பொருளைக் குறிக்கும்.

க ல ஹ ஸ க ஹ ல ஸ க ல என்ற 10 அக்ஷரங்களில் உள்ள அ காரங்கள்.

பிந்துபிஸ் திரிபிருச்யந்தே
ருத்ரேஸ் வர சதாசிவா:
சாந்தீ: ஹ்ரீம் சக்திச்ச சம்புச்ச
நாதத்திரிதய போதனா: !! 79

மூன்று ஹ்ரீம் காரங்களில் உள்ள பிந்துக்களால் ருத்ரன் ஈஸ்வரன் சதாசிவன் என்போர் கூறப்படுகின்றனர். சாந்தி, பிரகிருதி, சுத்த வித்யை, மூன்று நாதங்களால் போதிக்கப்படுகிறது.

நாதம் என்னும் பதத்தால் சந்திர கலை, ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமனை உன்மனி ஆகியவை குறிப்பிடப்படுகிறது.

ஏவம் ஸப்த த்ரிம் சத் ஸங்க்யாக
பதைர் மஹா வித்யா
ஷட்த்ரிம்சத் தத்வானாம்
தத்வாதீதஸ்ய சாபி தாத்ரீயம் !! 80

இவ்வாறு 37 பதங்களால் மகா வித்யை அமைகிறது. அது 36 தத்துவங்களுக்கும் அதற்கும் அப்பாற்பட்ட பரப்பிரும்மத்திற்கு அடையாளமாக விளங்குவது.

உயிரெழுத்துக்கள் - அ - 10, ஈ - 4, ஏ - 1 ஆக 15
மெய்யெழுத்துக்கள் - க் - 3, ல் - 3, ஹ - 5, ர் - 3, ஸ் - 2 ஆக16
பிந்துக்கள் 3, நாதங்கள் 3, ஆக 37

தத்துவங்கள் - 36

ஆத்ம தத்துவம் - பிரக்ருதி, அகங்காரம், புத்தி, மனம் - 4
த்வக், சக்ஷுஸ், ச்ரோத்ரம், ஜிஹ்வா, க்ராணம் - 5
வாக், பாணி, பாதம், பாயு, உபஸ்தம் - 5
சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் - 5
ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பூமி - 5 ஆக 24

சிவ தத்துவம் - சிவன், சக்தி, சதாசிவன், ஈஸ்வரன், சுத்த வித்யை 5

வித்யா தத்துவம் - மாயை, கலை, அவித்யை, ராகம், காலம், நியதி, புருஷன் ஆக 7

தத்வாதீரமான பரப்பிரும்மம் "ஏ" காரத்தின் அர்த்தம்.

ஜன்ய ஜனகயோர் பேதாபாவாத்
வாச்யஸ்ய வாசகேனாபி !
ப்ரஹ்மணி ஜகதோ ஜகதி ச
வித்யா பேதஸ்து ஸம்ப்ரதார்த்த: !! 81

பிறந்ததற்கும் பிறப்பித்ததற்கும், சொல்லுக்கும் பொருளுக்கும் வேற்றுமையின்மையால் பிரும்மத்திடம் உலகிற்கும் உலகிடம் வித்யைக்கும் வேற்றுமையின்மை என்பது தான்சம்பிரதாய அர்த்தமாகும்.

## நிகர்ப்பார்த்த நிருபணம்

இறைவன், குரு சாதகன் இவர்களிலேயே பேதம் இல்லை என்பது நிருபிக்கப்படுகிறது.

பரமசிவே நிஷ்கலதா தத பின்னத்வம்
ஸ்வதேசி கேந்த்ரஸ்ய !
தத் கருணாக: ஸ்வஸ்மின்னபி
ததபேதோ நிகர்ப்பார்த்த: !! 82

பரமாத்மாவிடத்தில் அதற்குப் பிறிதான வேறு பொருளின்மையும், குருவிற்கு அந்த பரசிவத்தினிடமிருந்து வேற்றுமையின்மையும், அக் குருவின் கருணையால் தன்னிடமும் பேதமின்மையும் நிகர்ப்பார்த்தத்த மாகும்.

பரசிவத்திற்கும் அதைத் தவிர வேறு பொருளின்மை - முதல் கூடத்தின் அர்த்தம்.

பரசிவத்திற்கும் குருவிற்கும் வேற்றுமையின்மை - இரண்டாவது கூடத்தின் அர்த்தம்.

குருவிற்கும் சாதகனுக்கும் வேற்றுமையின்மை - மூன்றாவது கூடத்தின் அர்த்தம்.

## கௌலிகார்த்த நிருபணம்

பரதேவதைக்கும் மந்திரத்திற்கும் சக்ரத்திற்கும் குருவுக்கும் ஆத்மாவிற்கும் ஐக்கியமே கௌளிகார்த்தம். எல்லோரும் ஒரே குலம் என்பதால் கௌலிகம்,

மாதாநிருபம் தேஜோமய்யா
ஸ்வஸ்யா மரீசி ரூபாணாம் !
ஆவரண தேவதானாமீசத்வா
துச்யதே ன்ணேசீதி !! 83

அம்பிகை தன் ஆவரண கணங்களுக்கு ஈஸ்வரியாக இருப்பதால் "கணேசீ" என்று அழைக்கப்படுகிறாள்.

கணேச க்ரஹ நக்ஷத்ர யோகினீ ராசி ரூபிணீம் !
தேவீம் மந்த்ரமயீம் நௌபி மாத்ருகா பீடரூபிணீம் !!

- தந்திர ராஜம்

இச்சாதி த்ரிசமஷ்டிர் குணத்ரயாட்யா
னலேந்து ரவி நேத்ரா !
ஏவம் நவபிர் யோகாத் க்ரஹ
ரூபேத் யுச்யதே மாதா !! 84

இச்சை கிரியை ஞான சக்திகளின் சமஷ்டி வடிவினள் அம்பிகை, ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குண வடிவினள்.

சூரியன், சந்திரன், அக்னி இம் மூன்றையும் கண்களாகக் கொண்டவள். இவ்வாறு ஒன்பதின் ஸ்வரூபமாக இருப்பதால் அம்பிகை கிரஹரூபிணி என்றழைக்கப்படுகிறாள். (கிரஹம் 9)

இச்சை அம்பிகையின் தலைபாகம்; ஞானம் நடுபாகம்; கிரியை பாதம்

இச்சா சிரா: ப்ரதேசேத
ஞானாஞ்ச தத தோகதம் !
க்ரியா பாத கதாஹ்யஸ்யா
ஸங்கேத பத்ததி !!

இந்த்ரிய தசகேனாந்த: கரண-
சதுஷ்கேன விஷயதசகேன !
ப்ரக்ருதி புருஷ - குணதத்வைர் -
ஜாதா நக்ஷத்ர ரூபிணீ மாதா !! 85

10 இந்திரியங்கள், 4 அந்தக்கரணங்கள், 10 விஷயங்கள் பிரகிருதி, புருஷன், குணங்கள் இவைகள் கூட்டால் (27) அம்பிகை நக்ஷத்திர ரூபிணியாகிறாள்.

10 இந்திரியங்கள் - ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5

10 விஷயங்கள் - சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் 5

நடத்தல், பேசுதல், ஏற்றல், விடுதல், ஆனந்தித்தல் 5 ஆக 10

அந்தக்கரணம் 4 - மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

ப்ரக்ருதி - முக்குணங்களும் சமமாக இருக்கும் நிலை !

புருஷன் - மூன்று குணங்களின் சமஷ்டி ரூபம் !

குண தத்துவம் - சுகம், துக்கம், மோகம், இவற்றின் மூலம்
ஆக மொத்தம் 27

நரபதி ரவி காஷ்டா ஷட்ஸமுத்ர த்விஸங்க்யை
ரகடபவஹ பூர்வைரக்ஷரைர் வேஷ்டிதாபி: !
டரலகஸஹவர்ணா த்யாகினீபிஸ்து ஷட்பிர் -
க்கடித தனுரிதீயம் கத்யதே யோகினீதி !! 86

அரசர் (நரபதி) என்றால் 16 ஆதித்யர் என்றால் 12. திக்குகள் 8, சமுத்திரம் 4.

1. அ முதல் 16 உயிர் எழுத்துக்கள் விசுத்தியில் உள்ள கமலம். த்வக்கின் அதிதேவதை டாகினீ.

2. க முதல் 12 எழுத்துக்கள் அநாகதத்தில் உள்ள கமலம் ரத்தத்தின் அதிதேவதை ராகினீ.

3. ட முதல் பத்து எழுத்துக்கள் மணிபூரகத்தில் உள்ளவை. மாமிசத்தின் அதிதேவதை லாகினீ.

4. ப முதல் 6 எழுத்துக்கள் ஸ்வாதிஷ்டானத்தில் உள்ளவை. கொழுப்புக்கு அதிதேவதை காகினீ.

5. வ முதல் 4 எழுத்துக்கள் மூலாதாரத்தில் உள்ளவை. எலும்பின் அதிதேவதை ஸாகினீ.

6. ஹ க்ஷ என்ற 2 எழுத்துக்கள் மூலாதாரத்தில் உள்ளவை. மஜ்ஜையின் அதிதேவதை ஹாகினீ.

(இதன் விவரங்கள் பிரதிபாவின் "ஆறாதாரங்களில் அம்பிகை" என்ற புத்தகத்தில் காணவும்)

பஞ்சபிர் நாககூர்மாத்யை:
ப்ராணாபானாதி பஞ்சபி: ।
ஜீவாத்ம பரமாத்மப்ப்யாம்
சைஷா ராசிஸ்வரூபிணீ ।। 87

வாயுக்கள் 5; உப வாயுக்கள் 5 ஆக 10. பரமாத்மா ஜீவாத்மா 2. இந்த 12-ம் சேர்த்து அம்பிகை ராசி ரூபிணியாகிறாள்.

அ முதல் 16 எழுத்துக்கள் சக்தி கூடம்

க முதல் 16 எழுத்துக்கள் காமராஜ கூடம்

த் முதல் 16 எழுத்துக்கள் வாக்பவ கூடம்

பரா, பச்யந்தி, மத்யமா, வைகரீ ஆகிய நான்கு வாக்குகளும் காரிய வடிவான சுத்த கணங்களும் கூடி வித்யைக்கு கணங்களின் ஈசத்தன்மையை அளிக்கிறது.

3 பிந்துக்கள் (பிந்துத்ரயம்) 3 நாதங்கள் இவை நீங்கலாக மூன்று கூடங்கள் ஆகிய இவற்றால் கிரஹத்வம் வித்யைக்கு சித்திக்கிறது.

வித்யையில் மெய்யெழுத்துக்களிலுள்ள பத்து "அ" காரங்களை பிரிக்கா விட்டால் நக்ஷத்திரத்துவமும் சித்திக்கிறது.

(நிகர்பார்த்தம் விளக்கப்படுகையில் அக்ஷரங்கள் 37 என்று கணக்கிடப்பட்டன. அதில் "அ" காரங்கள் பத்தை தனியாகப் பிரிக்காவிட்டால் அக்ஷரங்கள் 27 ஆகும்)

ஹ்ருல்லேகாபிஸ் திஸ்ருபிஸ் ததன்ய
கூடைச்ச யோகினீ யோகாத் !
ராசீபூதாப்யேஷா திஸ்ருணாம்
பூர்வாக்ஷரை ரைக்யாத் !! 88

ஒவ்வொரு கூடத்திலும் உள்ள ஹ்ரீம் அதற்கு முன்புள்ள லகாரத்துடன் ஒன்றாகக் கொள்ளப்பட்டால் அக்ஷரங்கள் 12 ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| க ஏ ஈ ல ஹ்ரீம் | - | 4 | |
| ஹ ஸ க ஹ ல ஹ்ரீம் | - | 5 | |
| ஸ க ல ஹ்ரீம் | - | 3 | ஆக 12 |

தேவ்யா ரூபாத்தராத்வேன வித்யாயாஸ் ததபேதத: !
கணேச க்ரஹ நக்ஷத்ர யோகினீ ராசி பீடதா !! 91

பீட ரூபம்:- மாத்ருகா அக்ஷர பீடங்கள் 51. உட்டியாணம், ஜாலந்திரம், பூர்ணகிரி, காமகிரி - 4; கணேச ரூபம் - 1; கிரஹம் 9; நக்ஷத்திரம் - 27; யோகினி - 6; ராசி - 12; ஆக மொத்தம் 55.

| | | |
|---|---|---|
| மூலாதாரம் | - | காமரூப பீடம் |
| அனாகதம் | - | பூர்ணகிரி பீடம் |
| விசுத்தி | - | ஜாலந்திர பீடம் |
| ஆக்ஞை | - | உட்டியாண பீடம் |

ரேகாதல கோணகணைர்க்கடனாச்
சக்ரே கணேசத்வம் !
த்ரைலோக்ய மோஹனாத்யைர்
நவபிச்சக்ரைர் க்ரஹத்வம் ச !! 92

கோடுகள் ஸ்ரீ சக்ர பூபுரத்திலும் வட்டங்களிலும், இதழ்கள் 16, 8 இதழ் கமலங்களிலும், கோணங்கள் சதுர்தசாரம் பஹிர்தசாரம் அந்தர்தசாரம் அஷ்டகோணம் நடு முக்கோணம் ஆகியவைகளிலும் உள்ளன. இவ்வாறான கணங்களின் தொகுதி ஸ்ரீ சக்ர மாதலால் இதற்கு கணேசத்வம் ஏற்படுகிறது.

## ஸ்ரீ சக்ரம்

விருத்தத்ரய தரணீத்ரய மன்வச்
ராணாம் விபஜ்ய கணனேன !
ஸப்தபிரிதரைச் சக்ரைச்
சக்ரே நக்ஷத்ர ரூபத்வம் !! 93

வட்டங்கள் 3; பூபுரக் கோடுகள் 3; சதுர்தசார கோணங்களை தனியாகக் கணக்கிடுவதால் 14; மற்ற சக்ரங்கள் 7; ஆக 27. இதனால் ஸ்ரீ சக்ரத்தின் நக்ஷத்திர ரூபம் சித்திக்கிறது.

ஸ்திதி ஸம்ஹ்ருதி சக்ரே தவேபத்மே
த்வே வ்ருத்த பூக்ருஹே ச த்வே ।
ஏவம் ஷட்பிர் யோகாத்
ஸ்ரீ சக்ரம் யோகினீ ரூபம் ।। 94

ஸ்திதி சக்ரங்கள்:-

14 கோணம், வெளி பத்துக் கோணம், உள் பத்துக் கோணம். ஸம்ஹார சக்ரங்கள்:- எட்டுக்கோணம், முக்கோணம், பிந்து. பத்மங்கள்:- 16 தளம் 8 தளம். விருத்தம்:- 3 வட்டம் - பூக்ருஹம் சதுரம்.

சிருஷ்டி சக்ரத்தில் சேர்ந்த பத்மங்களில் 2 யோகினிகளையும் மற்ற இடங்களில் ஒவ்வொரு யோகினியையும் பொருத்தினால் 6 யோகினி ரூபம்.

பஞ்சசது: சக்த்யனலா பிந்துர்
வ்ருத்தஞ்ச பூபிம்பம்
ஏவம் த்வாதச ஸங்க யைர்
கடனாச் சக்ரஸ்ய ராசித்வம் ।। 95

ஐந்து சக்தி கோணங்கள் கீழ் நோக்கியவை. நான்கு அக்னி (சிவ) கோணங்கள் மேல நோக்கியவை.

சக்ரம் வித்யாக்ஷரை ரேவ
ஜனனாத் ததபேதவத் ।
தேவ்யா ரூபாந்தரத் வாச்ச தேன
யுக் தோக்த ரூபதா ।। 96

ஸ்ரீ சக்ரம் வித்யா மந்திர அக்ஷரங்களிலிருந்து தோன்றியது. அதனின்று பேதமில்லாதது; தேவியின் ரூபமாக விளங்குகிறது.

யாவன் மாத்ருக முதிதான் யேக
ஸமே தானி பஞ்சாசத் ।
பீடானி புனர் கணி தான்
யோஜா பூகானி தத்வாரி ।। 97

காம ரூபம் பீடம் - காரண பிந்து ஸ்நானம்; பரா வாக்.
பூர்ணகிரி பீடம் - கார்ய பிந்து; பச்யந்தி வாக்.
ஜாலரந்திரம் - நாதஸ்தானம்; மத்யமா வாக்.
உட்டியானம் - பிந்துஸ்தானம்; வைகரீ வாக்.

கணப க்ரஹ பாதீனாம் சசி
நிதி காரார்து ஸூர்ய ஸங்கயானாம்
மேலனத: பீடானி ஜ்ஞேயான்
யே தேஷு பஞ்ச பங்சாசத் ।। 98

| | | |
|---|---|---|
| கணபதி | - | 1 |
| கிரஹ | - | 9 |
| நக்ஷத்திரம் | - | 27 |
| ருதுக்கள் | - | 6 |
| ஆதித்யன் | - | 12 |
| | ஆக | 55 |

இவையே 51 மாத்திரைகளும் 4 பீடங்களும்.

கத்ரிதயா தீகாராத் பிந்துர்
ஜாதஸ் ததக்ரிமே சக்ரே
ஹிருல்லேகாபிஸ் தத்பரசக்ர
த்ரிதயம் ஹகாராப்யாம் !! 99

ஏகாரேண ச தத் பரசக்ரே
ஜாதே ஸகாராப்யாம்
சதுரச்ராணி லகாரை ரேவம்
வித்யாக்ஷ ரேண சக்ரஜனி !! 100

பிந்து - க க க ஈ லிருந்து தோன்றிற்று.

முக்கோணமும், எட்டு கோணமும் - ஹ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீம்.

உள் பத்து, வெளி பத்து கோணங்கள் - 14 கோணம் ஹ ஹ ஏ

அஷ்ட தளம், 16 தளம் - ஸ ஸ

சதுரங்கள் - ல ல ல.

பூபுரத்திலிருந்து வரிசையாக ல ஸ ஹ ஈ ஏ ர க நாதம் பிந்து. இந்த ஒன்பதின் சமஷ்டி "மேரு மந்திரம்" எனப்படும்.

ஏதத் திரிதயாபின்ன: ஸ்வகுருஸ்
ததபேத பாவனா தார்ட்யாத் !
தேன கணேசாதி மயஸ்தத்தயயாச
ஸ்வயம் ததா ரூப: !! 101

குரு, மந்திரம், தேவதை, சக்ரம் இம் மூன்றுடன் அபேதமானவர் கணேச, கிரஹ, நக்ஷத்திர, யோகினி, ராசி, பீடங்களின் மயமானவர்.

இத்தம் மாதா வித்யா சக்ரம்
ஸ்வகுரு: ஸ்வயஞ்சேதி !
பஞ்சானாமபி பேதாபாவோ மந்த்ரஸ்ய
கௌலிகார்த்தோதயம் !! 102

அம்பிகை, ஸ்ரீ வித்யை, ஸ்ரீ சக்ரம், ஸ்வகுரு இவர்களிடையே பேதமில்லை.

## ஸ்ரீ சக்ர ரகசியம்

ஸ்ரீ வித்யை பாரத பூமி முழுவதும் புகழ் பெற்ற மார்க்கமாக ஆதி காலம் முதல் இருந்து வருகிறது. வால்மீகி ராமாயணத்தில் விசுவாமித்திரர் ராம, லக்ஷ்மணர்களுக்கு "பலா அதிபலா" மந்திரங்களை உபதேசித்ததாகக் கூறப்படுகிறது. அம் மந்திரங்கள் ஸர்வ ஞானஸ்ய மாதரம் (எல்லா மந்திரங்களுக்கும் தாயானது) எனப்படுகிறது. இதை மஹா ஞான வித்யை என்பர்.

ஸ்ரீ வித்யை அன்னையின் பெருமைகளை உள்ளடக்கிய மந்திர சாதனம், மற்றொரு சாதனம் ஸ்ரீ சக்ரம். ஸ்ரீ சக்ரம் என்ற இந்த ரகசியமான மாளிகையில் சக்தி உறைகிறாள் என்று கூறுகிறது ஸௌந்தர்ய லஹரி.

ஸ்ரீ சக்ரம் மேரு மலையை வடிவாகக் கொண்டது. அது ஒன்றோ டொன்று ச்ந்திக்கும் மேற்புர, கீழ்ப்புரக் கோணங்களால் ஆனது. 43 முக்கோணங்களை உள்ளடக்கியது. இவற்றைச் சுற்றி 8 தளம். அதன் மேல் 16 தளம், அதைச் சுற்றி மூன்று வட்டங்கள், கடைசியில் நான்கு வாயில்களுடன் கூடிய மூன்று கோடுகளாலான சதுர வடிவம்.

கீழ் நோக்கியுள்ள ஐந்து முக்கோணங்கள் சக்தி வடிவம். மேல் நோக்கியுள்ள நான்கு முக்கோணங்கள் சிவ வடிவம் என்று வாமகேச்வர தந்திரம் குறிப்பிடுகிறது. (ஸ்ரீ லக்ஷ்மீதரர் நேர் எதிராகக் கூறுகிறார்)

ஸ்ரீ சக்ரத்தில் வெளியே இருந்து உள்ளே செல்வது லயக்கிரமம், உள்ளேயிருந்து வெளியே வருவது சிருஷ்டிக் கிரமம்.

ஆவரணம் என்றால் திரை, ஒன்பது திரைகள் அகன்றால் தான் தேவியைக் காணமுடியும்.

முதல் ஆவரணம் - நினைவு (ஜாக்ரத்)
2-வது ஆவரணம் - கனவு (ஸ்வப்னம்)
3-வது ஆவரணம் - தூக்கம் (சுஷுப்தி)
4-வது ஆவரணம் - துரியம் (ஈஸ்வர விசாரம்)
5-வது ஆவரணம் - குரு அருள்
6-வது ஆவரணம் - உபதேசம் (சிரவணம்)
7-வது ஆவரணம் - மனனம்
8-வது ஆவரணம் - நிதித்யாஸனம்
9-வது ஆவரணம் - ஸவிகல்ப சமாதி

முதல் ஆவரணம் :- (ஜாக்ரத்)

பூபுரம் (அகுல ஸஹஸ்ராரம்) பிருத்வி தத்துவம். பிரகடமாக இருக்கவேண்டிய இப் பிரபஞ்சத்தில் எல்லாவற்றையும் பிரகடனப் படுத்த வேண்டி சப்த பிரபஞ்சத்தில் ஆட்பட்டு பூஜிக்கிறான்.

எல்லா காமனைகளும் பூர்த்தியாகும் நிலை காலம், இடம், நியதி இவைகளுக்குக் கட்டுப்பட்ட நிலை. இந்த நிலை ஒழிய வேண்டும்.

ஜீவன் வெளி பிரபஞ்சத்தில் வியவகாரம் செய்யும்போது விழிப்பு நிலை. இந்திரியங்கள் மனது மூலம் விஷயங்களை அனுபவிக்கிறான். இந்திரியங்கள் மூலம் அறிவதற்குத் தன்மாத்திரை என்று பெயர். இந்திரியங்களுக்கு மனமே ஆதாரம். இம்மாதிரி அறியும் ஜீவனுக்கு விச்வன் என்று பெயர். (விச்வரூபா, ஜாகரிணி என்று இந்த அவஸ்தை களுடன் அபேதமாக இருக்கும் அம்பிகை அழைக்கப்படுகிறாள்)

இரண்டாவது ஆவரணம்:- (ஸ்வப்னம்)

கனவு, நினைவுகள் எல்லாம் "ஸ"காரப் பிரகிருதியாகிய இரண்டாவது ஆவரணத்தில் கனவு போலாகின்றன. குப்த யோகினிகளான 16 நித்யா கலா தேவிகள் 16 தளம். சர்வ ஆசா பாசங்களும் நீங்க ஸர்வாசா பரிபூர்ண சக்ரம். பின் உறக்கம்.

தூங்கும்போது கனவு ஏற்படுகிறது. அப்போது இந்திரியங்கள் அடங்கி யிருந்தாலும் மனம் விழிப்பு காரணமாக பிரபஞ்சத்தில் இருப்பது போலவே உணர்வு ஏற்படுகிறது. இந்த அனுபவங்கள் உண்மை போலத் தோன்றினாலும் உண்மையல்ல, அதுவே ஸ்வப்னாவஸ்தை. இந்த ஜீவனுக்கு தைஜஸன் என்று பெயர். (ஸ்வபந்தி தைஜஸாத்மிகா)

மூன்றாவது ஆவரணம்:- (சுஷுப்தி)

மூலாதாரத்தில் சிவ தத்துவமான 5 முகமுடைய ஸாகினி பரா சக்தி ஸ்தானமாக விளங்குகிறாள். இங்கு சக்திகள் குப்த தரமான யோகினி களாக இருக்கின்றனர்.

தூக்க நிலையில் மனமும் அடங்கி விடுகிறது. அப்போது அனுபவம் எதுவும் கிடையாது. இந்த ஜீவனுக்கு பிராக்ஞன் என்று பெயர். இதுவே பிரும்மானந்த அனுபவத்திற்கு முதல் படி. ஆனால் அவித்யை சம்பந்த மிருப்பதால் இது சூன்யமான அனுபவம். இந்த ஜீவனுடன் அபின்னமாக இருக்கும் அம்பிகைக்கு ஸுப்தா என்று பெயர்.

ஜாக்ரத், ஸ்வப்ன, சுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகள் தான் என்பர் சிலர். தாந்த்ரீகர்கள் இவைகளுடன் துரியம், துரியாதீதம் இரண்டையும் சேர்ப்பார்கள்.

சுஷுப்தியில் ஜீவன் பரப் பிரும்மத்தோடு முற்றிலும் கலந்து விடுவதில்லை. துரியத்தில் ஜீவன் வியவகாரம் செய்யும் சரீரத்திற்கு மகா காரண சரீரம் என்று பெயர். துரியாதீதத்தில் பிரும்மத்துடன் ஐக்யமாகி விடுகிறான்.

நான்காவது ஆவரணம்:- (ஈச்வர விசாரம்)

சகல செளபாக்ய சக்ரம், அம்பிகை குரு ஸ்வரூபிணியாக மாறி குரு நாதர்களாகப் பூஜிக்கப்படுகிறாள். சில சம்பிரதாயங்களை கைக் கொண்டு சம்பிரதாய யோகினிகளைப் பூஜிக்கிறான். ஸர்வ செளபாக்யங்களும் வழங்கப்படுகிறது. சரீரத்தில் நான்காவது இடமான ஸ்வாதிஷ்டானம். ஆகவே துரீயாவரணம். 14 புவன சக்திகள்.

சகுண உபாசனையிலேயே இருந்துவரும் சாதகனுக்கு சத்குருவின் கிருபா கடாக்ஷம் தேவைப்படுகிறது. ஆதி குரு முதல் ஸ்வகுரு வரை ஆராதித்த பின் இவனுக்கு ஆத்ம ஞானம் கிடைத்திருக்க வேண்டும். ஆனால் இல்லை. ஏன் என்றால் இவன் இன்னும் சில பக்குவங்களை யடைய வேண்டும். தத்துவங்களை உணர்ந்து பூஜித்தாலே ஆத்ம ஞானம் சித்திக்கும்.

கொஞ்சம் தன்னை உணரக்கூடிய இவள் பெரும் அளவுக்கு தன்னை உணரவேண்டும். இதற்கிடையில் அநேக இடர்பாடுகளை நீக்கிக் கொள்ள வேண்டும்.

மூன்று அவஸ்தைகளையும் அவைகளை வியவகாரம் செய்யும் ஜீவபேதங்களையும் அறிந்தால் "சுத்த வித்யா" அறிவு ஏற்படும். இந்த அறிவு ஏற்பட்டு விட்டால் மற்ற மூன்று அவஸ்தைகளால் பாதிக்கப் படமாட்டான்.

க்ரிஷு தாமஸுயத் போக்யம்
போக்தா யச்ச ப்ரகீர்த்தித:
வித்ய: தததுப்யம் யஸ்து
ஸ புஞ்ஜநோ ந வித்யதே - ஸ்பந்த சாஸ்திரம்

இந்த துரீயத்தினால் ஏற்படும் ஆனந்தம் த்ரிஷு சதுர்த்தம் ஆஸேச்யம் என்றபடிப் பரவி இருக்கும். துரியாதீதம் எல்லா அவஸ்தை களையும் கடந்தது.

ஐந்தாவது ஆவரணம்:- (குரு அருள்)

சர்வ அபீஷ்டங்களையும் தரும சக்ரம். மணிபூரக ஸ்தானத்தில் தான், உண்ட ஆகாரம் ஜீரணிக்கப்படுகிறது. சர்வ அங்கங்களும் செளபாக்யம் பெறுகின்றன.

உண்ட உணவு அமிர்தமாகி உயிரளிக்கிறது என்பது அறிவு தத்துவம். ஸர்வார்த்த ஸாதகம் குலோத்தீர்ண யோகினிகள் "ஏ" காரப் பிரகிருதிகள். ஸர்வஸித்திப்ரதம். மாயையால் ஏற்பட்ட அவித்யா காரணங்கள் நசிகின்றன.

வைராக்ய உணர்வை ஏற்படுத்தும் ஸர்வோன்மாதினி.

ஆறாவது ஆவரணம்:- (நல் உபதேசம்)

ரக்ஷிக்கக்கூடிய சக்கிரம். உள் பத்துக் கோண யோகினிகள் ஸர்வ ரக்ஷையை உண்டு பண்ணுகிறார்கள். அம்பிகை பிறவாவரம் தரும் நிகர்ப்ப யோகினிகளாக விளங்குகிறாள். அனாகத ஸ்தானம்.

ஏழாவது ஆவரணம்:- (மனன அபிவிருத்தி)

ரோக நிவர்த்தி வசினி வாக் தேவதைகள். இன்னும் அக்ஞானக் கொடுமை இருப்பது உணரப்படுகிறது.

எட்டாவது ஆவரணம்:- (நிதித்யாசனம்)

சகல ஸித்திகளும் அருளும் சக்ரம். அவ்யக்தம் மஹத்துவம் அகங்காரம் மூன்றும் மூன்று கோடுகள்.

மகா காமேஸ்வரி ஆத்ம தத்துவம் புரியவைக்கிறாள். ஆனால் பூரணமாயை இன்னும் விலகவில்லை. கலை, ராகம், காலம், நியதி முதலியவைகளுக்கு கட்டுபட்டு இருக்கும். வித்யாதத்துவ நிலை இதை விலக்க மகா வஜ்ரேச்வரி அருள்கிறாள். இதன் பின்பே சிவதத்துவ ஸ்வரூபியான மகா பகமாலினி அருள் கிடைக்கிறது.

மகா காமேஸ்வரி - காமகிரி பீடவாஸினி. காதி வித்யை அதி தேவதை. சிருஷ்டி செய்யும் இச்சா சக்தி.

மகா வஜ்ரேஸ்வரி - ஜாலந்திர பீட வாஸினி. ஹாதி வித்யையின் அதி தேவதை. ஸ்திதி தொழில் செய்யும் ஞான சக்தி.

மகா பகமாலினி - பூர்ணகிரி பீட வாஸினி. சம்ஹார தொழில் செய்யும் கிரியா சக்தி. ஸாதி வித்யையின் அதி தேவதை. திரிபுடி நிலை ஒழிதல். எட்டாத தத்துவங்கள் எல்லாம் இந்த எட்டாவது ஆவரணத்தில் எட்டி விடுகிறது. அகந்தை நீங்கி ஆத்ம ஞானம் பெறும் வாய்ப்பு ஏற்படுகிறது.

ஒன்பதாவது ஆவரணம் - (ஸவிகல்ப சமாதி)

ஸர்வானந்த மயம். ஆக்ஞா சக்ரம். ஆத்ம பிரும்ம ஐக்யம்.

இந்த ஆனந்தத்தைப் பெறுவது எப்படி ?

வெளி வஸ்துக்களிலிருந்து நமக்கு ஆனந்தம் வரவில்லை. நம் மிடமிருந்தே ஆனந்தம் பிறக்கிறது. நமது உண்மை ஸ்வரூபமான ஆனந்தத்தை நாம் அக்ஞானத்தினால் மூடி மறைத்துக் கொண்டாலும் கூட நம்முடையது என்று ஒன்றிடம் சம்பந்தம் வைக்கும் போதுதான் அதிலிருந்து ஆனந்தத்தை யடைகிறோம். அந்த சம்பந்தம் போய் விட்டால் ஆனந்தம் போய்விடுகிறது.

வயல் தனக்குச் சொந்தமாக இருக்கும் போது அதிக விளைச்சல் ஏற்பட்டால் மனம் சந்தோஷமடைகிறது. அதே வயல் மற்றொருவருக்கு விற்ற பின், முன் ஆண்டை விட அதிக விளைச்சல் இருந்தால் "அடடா! நமக்கு அந்த அதிர்ஷ்டம் இல்லையே" என வருத்தம் ஏற்படுகிறது. "எனது" என்ற சம்பந்தம் இருந்தால்தான் ஆனந்தம் ஏற்படுகிறது.

மாயைக்கு ஆளான "நான்" என்பதன் சம்பந்தத்திற்கே இத்தனை ஆனந்தம் இருக்கிறது என்றால் எதிலும் சம்பந்தப்படாமல் பூரண ஞானமாக இருக்கிற அந்த வெறும் "நான்" எத்தனை ஆனந்தமாக இருக்கும்?

சிறிய துவாரங்கள் கொண்ட ஒரு பானையும் எரியும் விளக்கின் மீது மூடினால் இத்துவாரங்கள் வழியே ஒளிக்கிரணங்கள் வெளி வரும். மாயையால் மூடப்பட்ட ஆத்ம தீபத்திலும் இந்திரியத் துவாரங்கள் வழியாக கொஞ்சம் கொஞ்சம் ஆனந்தம் ஏற்படவே செய்யும், மாயை பானையை உடைத்துவிட்டால் ஆனந்த ஜோதி மயமாகவே ஆகிவிடலாம்.

மாயையை எப்படி உடைப்பது? ஆசையை அடக்குவதே. மனம் இருக்கும் வரை ஆசைகள் இருக்கவே செய்யும். ஆகவே மனதை அடக்க வேண்டும். ஆத்ம சக்தியைப் பலவாறாக சிதறச் செய்யும், எல்லா இந்திரியங்களையும் அடைத்து விட்டால் அப்போது எல்லா சக்திகளும் ஒரே இடத்தில் அமைதியாக ஆனந்தமாகக் கூடி நிற்கும்.

சர்வ சம்மோகனத்திலிருந்து சர்வானந்த மயத்திற்கு வருவதே ஸ்ரீ சக்ர பூஜை.

## ரஹஸ்யார்த்த நிரூபணம்

அக்னி, சூரிய, சந்திர கலைகள், குண்டலினி சக்தி இவைகள் பற்றி விளக்கப்பட்டுள்ளது.

த்வாதச ஷோடச தசபிஸ் தபன
சசிதஹன கலாபி ராகீர்ணை: !
பஞ்சா சத்பிர் வர்ணை ரபின்ன
தேஹாகுலீன குண்டலினீ !! 103

சூரிய கலைகள் 12 -

| | | |
|---|---|---|
| தபினி | ஸுஷும்னா | |
| தாபினி | போகதா | |
| தூம்ரா | விச்வா | |
| மரீசி | போதினீ | |
| ஜ்வாலினி | தாரிணி | |
| ருசி | க்ஷமா | இதில் அக்ஷரங்கள் 12 |

சந்திர கலைகள் 16 -

| | |
|---|---|
| அம் - அம்ருதா | லும் - சந்திரிகா |
| ஆம் - மானதா | லூம் - காந்தி |
| இம் - பூஷா | ஏம் - ஜ்யோத்ஸ்னா |
| ஈம் - துஷ்டி | ஐம் - ஸ்ரீ |
| உம் - புஷ்டி | ஓம் - ப்ரீதி |
| ஊம் - ரதி | ஔம் - அங்கதா |
| ரும் - த்ருதி | அம் - பூர்ணா |
| ரூம் - சசினி | அ: - பூர்ணாம்ருதா |

இதில் 16 அக்ஷரங்கள்

அக்னி கலைகள் 10

| | |
|---|---|
| யம் தூம்ரார்ச்சிஸ் | ஷம் ஸுஸ்ரீ |
| ரம் ஊஷ்மா | ஸம் ஸுருபா |
| லம் ஜ்வலினி | ஹம் கபிலா |
| வம் ஜ்வாலினி | ளம் ஹவ்யவாகினி |
| சம் விஸ்புலிங்கினி | க்ஷம் கவ்யவாகினி |

இதில் அக்ஷரங்கள் 10

பிஸதன்வீ தடிதாபா மூலாதாரஸ்த்த -
பத்மச்ருங்காடாத் !
பித்வா மூலஹ்ருதாஜ்ஞாகத
வன்ஹி ரவீந்து மண்டல த்ரிதயம் !! 104

தாமரை நூல் போல மின்னல் கொடி போல பிரகாசிப்பவள். மூலாதார நான்கு தளத் தாமரையிலிருந்து கிளம்பி ஆறாதார சக்ரங்களிலுள்ள அக்னி, சூரியன், சந்திரன் ஆகிய மூன்று மண்டலங்களையும் கடந்து செல்கிறாள் குண்டலினி அம்பிகை.

வ்யோமனி சிச்சசி மண்டலமத்யே
த்வகுலேன ஸங்கம்ய !
உபயாங்க ஸங்கஜன்யம்
ப்ரவாஹயந்தீ ஸுதா பூரம் !! 105

நெற்றிக்கு மேல் 12 விரற்கடைக்கப்பால் தலை உச்சிக்கும் இரண்டங்குலம் மேலாக உள்ள ஆகாசம் பரமாகாசம். இங்குள்ளது சித் சக்தி மண்டலம். இதன் வடிவம் கவிழ்ந்த ஆயிரம் இதழ் கமலம். அதன் மத்தியில் அகுல குண்டலினி. குல குண்டலினி அங்கு சேர்ந்ததும் ஒரு அமிர்தம் பெருகி டாகினீ முதலிய மண்டலங்களை வியாபித்து ஆனந்தத்தை உண்டாக்குகிறது.

ஸ்வயமபி தத்யான வசான்மத்தா
பூத்வா புனச்ச தேனைவ !
மார்க்கேண பராவ்ருத்ய ஸ்வஸ்மின்
ஸ்த்தானே ஸுகம் ஸ்வபிதி !! 106

தானும் அப் பானத்திற்கு வசப்பட்ட காரணத்தினால் மதம் மிக்கவளாய் மீண்டும் மூலாதாரத்திற்கே சென்று குண்டலினி உறங்க ஆரம்பித்து விடுகிறாள்.

ஸாக்ஷாத் வித்யைவைஷா ந ததோ
பின்னா ஜகன்மாதா !
அஸ்யா: ஸ்வாபின்னத்வம்
ஸ்ரீ வித்யாய: ரஹஸ்யார்த்த: !! 107

ஸ்ரீ வித்யையே இக்குண்டலினி. அவள் வேறு, சாதகன் வேறு அல்ல.

## மஹா தத்வார்த்த நிரூபணம்

பரப்பிரும்மத்தினிடம் தன் ஆத்மா ஒன்றினைந்த நிலையையடைவதாகப் பாவிக்க வேண்டும்.

வாகிந்த்ரியை ரகம்பே தத்வாதீதே
மஹத்தரேணுதரே !
வ்யோம்னோப்யுபரி ஸ்திதிமதி
விச்வாபின்னே சிதானந்தே !! 108

வாக்காலும் மற்ற இந்திரியங்களாலும் அடையமுடியாததாய் தத்துவங்களுக்கு அப்பாற்பட்டதாய் மிக சூக்ஷமமாக ஆகாயத்திற்கும் மேற்பட்டதாக விளங்குவது பரப்பிரும்மம்.

ப்ரஹ்மணி பரே நியோஜ்ய: ஸ்வாத்மா
ததபேத ஸம்ப்ராப்த்யை !
ஏக்ஷ மஹாதத்வார்த்த:
ஸ்ரீ வித்யாயா: சிவேநோக்த: !! 109

இம் பரப்பிரும்மத்துடன் நம் ஆத்மா ஒன்றிணைந்து அபேதமாக இருப்பதாகப் பாவிக்கப்பட வேண்டும்.

## நாமார்த்த சப்த ரூபார்த்த நிருபணம்

அம்பிகையே அக்ஷர வடிவினள். அதன் சப்த வடிவினள்.

தத்தத் வர்ணார்த்தேயம் தத்தத்
வர்ண - ஸ்வரூபேயம் !
இதி து ஸ்ரீ வித்யாயா
நாமார்த்த: சப்த ரூபார்த்த: !! 110

அம்பிகை அக்ஷர வடிவாகவும் அவைகளின் பொருள் வடிவாகவும் உள்ளவள்.

## நாமத்தின் பகுதிகளின் அர்த்தம்

அம்பிகையின் மந்திரங்களின் அவயங்களாக இந்த அக்ஷரங்கள் விளங்குகின்றன.

கல்யாண்யோகாக்ஷர்யா -
வீசித்ரீ சாபி லலிதா ச !
இத்தம் நாம த்ரிசதீவாச்யோ
ர்த்தஸ் - தத் ததக்ஷரஸ்யாபி !! 111

கல்யாணி, ஏகாக்ஷரி, ஈசித்ரீ . லலிதா போன்ற நாமங்களின் வாச்யார்த்தம் அந்தந்த அக்ஷரங்களின் அர்த்தமாகவும் ஆகிறது.

நாமைகதேசமாத்ரே நாமக்ரஹணஸ்ய
லோக - ஸித்தத்வாத் !
நாமோபஸ்த்திதி - கம்ய: ப்ரோக்தோ
நாமைக தேசார்த்த: !! 112

ஒருவருக்குள்ள பெயரை சுருக்கி கூறுவது போல மந்திரத்தின் ஒவ்வொரு எழுத்தும் பகுதியும் பரதேவதையையே கூறுவதாகும்.

திதிமித - பிந்துகணோத்தர - கஜ - ரஸ -
கிரி -. தஸ்ர - ராம - ஸங்க்யாகா: !
அர்த்தா பவந்தி யோகாத்
நாம்னோ நாமைகதேசஸ்ய !! 113

திதிகளுக்கு சமானமான 15 பிந்துக்கள் அல்லது பூஜ்யங்களின் தொகுதி பின்பு சேர்க்கப்பட்ட எட்டு, ஆறு, ஏழு, இரண்டு, மூன்று என்ற எண்களையுடைய அர்த்தங்கள் ஏற்படுகின்றன.

